"...சேலம் மாவட்டத்தில் உள்ள கோயில்களின் வரலாறுகளை அறிவதற்கு உதவியாக இருக்கிறது இந்நூல்... இதுபோன்று வேறு நூல்களையும் இவர் எழுதி உதவுவார் என்று எதிர்பார்க்கிறோம்."

மயிலை. சீனி. வேங்கடசாமி.

சேலம் மாவட்டக்

# கோயில்கள்

10 புகைப்படங்களுடன்...



அ. இராசேந்திரன் எம்.ஏ.,



கேரளப் பல்கலைக் கழக முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகப் படைத்த ஆய்வு நூல்.

# சேலம் மாவட்டக் கோயில்கள்

To
திவாகரன் அவர்களுக்கு
அன்புடன்

32-2

அ. இராசேந்திரன், M.A.,



தமிழ் ஆய்வுக்கழக வெளியீடு, செந்தாரப்பட்டி.

விற்பனை உரிமை :

ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்,

கோர்ட் ரோடு, நாகர்கோயில்-1.




Tamil Research Publisher Series-1.




| | |
|---|---|
| *Title :* | Salem Mavattak Koilgal [Temples in Salem Dist] |
| *Author :* | A. RAJENDRAN, M. A., |
| *Publisher :* | Academy of Tamil Research Publisher, Sendarappatty |
| *Language :* | Tamil |
| *Photographs :* | A. RAJENDRAN, M. A., |
| *Price :* | Rs. 4-50 per Copy |
| *Edition :* | First Edition-1973 |
| *Size :* | Crown Octavo ($7\frac{1}{2}'' \times 5\frac{1}{2}''$) |
| *Subject :* | Architecture, History & Inscription |
| *Printers :* | Santhi Power Press, Attur. Salem, Dist. |

To

My parents

with love

# இதனுள்ளே...

## இதனுள்ளே...

**விரைவில் வெளிவரவிருக்கும் ஆசிரியரின் பிற நூல்கள்**



கட்டி மகிபன்பள்ளு – தெளிவுரையுடன்
மன்மத விலாசம் — தெளிவுரையுடன்
தமிழில் ஆய்வுமுறை (Method of Tamil Research)

மயிலை. சீனி. வேங்கடசாமி

74, காரணீசுவரர் கோயில் தெரு
மயிலாப்பூர், சென்னை-4.

# அணிந்துரை

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலை மாணவர் திரு. அ. இராசேந்திரன் அவர்கள் 'சேலம் மாவட்டக் கோயில்கள்' என்னும் இச்சிறு ஏட்டினை எழுதியுள்ளார். தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு மாவட்டத்துக்கும் இது போன்ற சுருக்கமான கோயில் வரலாறுகள் வெளிவருவது பயனுள்ளதாகும். இந்த முறையில் இவர் எழுதியுள்ள இச் சுருக்கமான நூல் வரவேற்கத்தக்கது. கற்கருவிகளை ஆயுதங்களாகக்கொண்டு வாழ்ந்துவந்த பழங்கால மனிதர் (புதிய கற்கால மனிதர்) வாழ்க்கையிலிருந்து தொடங்கிப் பெருங்கற்காலம் (நடுகல், சதிக்கல்), பிடாரி, ஐயனார் முதலான சிறு தெய்வ வழிபாடு முதலியவற்றைக் கூறி, வெற்றித் தெய்வமாகிய கொற்றவைக்குத் தரப்பட்ட தலைப்பலி முதலியவற்றை இந்நூலில் தருகிறார். கொல்லிமலைப் பாறைகளுக்கிடையே முற்காலத்தில் கவர்ச்சிகரமாகக் காணப்பட்ட உருவெளித் தோற்றமாகிய கொல்லிப் பாவையைப் பற்றியும் இதில் கூறப்படுகிறது. பௌத்த ஜைன சமயம் பற்றிய சுருக்கமான செய்திகளும் சைவவைணவ சமயக் கோயில்களின் வரலாறுகளும் இந்நூலில் கூறப்படுகின்றன. பல்லவர், சோழர், நாயக்கர் மன்னர் காலத்துக் கோயில்களும், இக் கோயில் கட்டடங்களில் காணப்படுகிற கல்வெட்டுச் சாசனச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன. பொதுவாகச் சேலம் மாவட்டத்தில் உள்ள கோயில்களின் வரலாறுகளை அறிவதற்கு உதவியாக இருக்கிறது இந்நூல். இந்நூலாசிரியரே கூறுகிற

படி இது இவருடைய 'கன்னி முயற்சி' (முதல் முதலாக இவர் எழுதுகிற நூல்) எப்படிப்பட்டவருக்கும் முதற் முயற்சியில் சில தவறுகளும் பிழைகளும் நேரிடுவது இயற்கையே. சேலம் மாவட்டத்துக் கோயில்களைப்பற்றி அறிவதற்கு இந்நூல் உதவியாக இருக்கிறது என்பதில் ஐயமில்லை. இந்நூல் ஆக்கிய மாணவர் திரு. அ.இராசேந்திரனுக்கு என்னுடைய பாராட்டும் வாழ்த்தும் உரியன. இதுபோன்று வேறு நூல்களையும் இவர் எழுதி உதவுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

மயிலாப்பூர்<br>சென்னை-4

**மயிலை. சீனி வேங்கடசாமி.**<br>6—6—73

தமிழ் ஆய்வுக் கழகம்.
(தமிழ் ஆய்வுநூல் வெளியீட்டுத்துறை)
21-A, ஊருணித் தெரு,
செந்தாரப்பட்டி
(சேலம்)

# பதிப்புரை

கலை, இலக்கியம், இலக்கணம், வரலாறு, மொழியியல் போன்ற துறைகளில் ஆய்வுத் திறன்மிக்க சிலரைக்கொண்டு தமிழ் ஆய்வுக் கழகம் (Academy of Tamil Research) என்ற ஒரு நிறுவனத்தை துவக்கியுள்ளோம். இவ்வாய்ப்புக் கழகத்தின் நோக்கம்.

1. M.A., M Litt, Ph. D. போன்ற பட்டங்களுக்காக, செய்யப்பட்ட பொருட் கட்டுரைகளை பதிப்பித்தல்.
2. இதுவரை வெளியிடப்படாதச் சுவடிகளை பாட பேதங்களுடன் வெளியிடுதல்.
3. ஆக்க இலக்கியங்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் முதலியன வெளியிட வகை செய்தல்.
4. மறைந்துபட்ட தமிழ் அறிஞர்களுக்கு மலர் வெளியிடுதல், முதலியன.

இவ்வரிசையில் ஆண்டுக்கு ஒரு ஆய்வுநூல் வெளியிடலாம் என்பது திட்டம். இக்கழகத்தின் வழி வெளியிடப்படும் முதல் நூல் இது. எங்கள் தொண்டு ஒல்லும் வகையான் செவ்வனேச் செயல்பட உங்களையே எங்கள் மூலதனமாகக் கொண்டுள்ளோம். எம் பணி சிறக்க உதவுவீர்.

பதிப்பாளர்,

## முன்னுரை...

கேரளப் பல்கலைக் கழக முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாக யான்படைத்த திறனாய்வு நூல் இது.

சேலம் மாவட்டக் கோயில்கள் வரலாற்றைக் கால வாரியாக விளக்கும், 'சேலம் மாவட்டக் கோயில்கள்' என்னும் இந்நூல் எனது கன்னி முயற்சியாகும்.

இதனை எழுதுங்கால் எனக்குப் பேருதவி புரிந்த பேராசிரியர் தமிழ்த்திரு. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், எம்.ஏ., பி.எச் டி., அவர்களுக்கும், ஆய்வின் வழிகாட்டிகளாக இருந்து பல கருத்துக்களைக் கூறி ஆற்றுப்படுத்திய திருமிகு. கே சுப்பிரமணியம், எம். ஏ., திருமிகு. தா.வே. வீராசாமி, எம். ஏ , பி எச் டி , அவர்களுக்கும் கையெழுத்துப் பிரதியினை செப்பனிட்டுக் கொடுத்த திருமிகு. கி. நாச்சிமுத்து, எம். ஏ., அவர்களுக்கும் எனது அகங் கனிந்த நன்றி.

இந்நூலின் சில பகுதிகள் தமிழ்ப்பொழில், கொங்கு, இளவேனில், ஆய்வுத்தேன், முதலிய இதழ்களில் வெளி வந்தன. அவ்விதழாசிரியர்களையும் என்னால் மறக்க முடியாது. மேலும் இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய ஆய்வுப் பேரறிஞர். திருமிகு. மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்களுக்கு என் வணக்கமும் நன்றியும் உரியன. இந்நூல் வெளிவருங்கால் பல்லாற்றானும் உதவிய திருமிகு. டாக்டர் வை. இராசமாணிக்கம், L I.M. அ. சந்தோஷம் மற்றும் எனது அருமைத் தோழர்களுக்கும் என் நன்றி என்றும் உரியதாகும்

மிகக் குறைந்த நாட்களிலேயே நூல் அச்சிட்டு வெளியிட்டதால் பிழைகள் மிகுந்திருக்கக்கூடும். படிப்போர் குணம் கண்டால் ஏற்றும் குறைகண்டால் குறிப்பிட்டும் எழுதினால் அடுத்தப் பதிப்பில் திருத்திக்கொள்ள வாய்ப்பாக இருக்கும்.

கடைசியாக, இந்நூலை சிறப்பாகவும் உரிய காலத்திலும் அச்சிட்டுக்கொடுத்த சாந்தி மின் அச்சகத்தாருக்கு என் அன்பு கலந்த நன்றி.

செந்தாரப்பட்டி
10-9-73

அ. இராசேந்திரன்,

# 1. தோற்றுவாய்...

இந்திய மொழிகளில் மாவட்ட அளவில் கோயில் சிற்பம், கல்வெட்டுக்களை இணைத்து ஆய்ந்த ஆய்வு நூல்கள் மிகச் சிலவே. அப்படி ஆய்ந்து வெளி வந்தவையும், கால வாரியாக வளர்ச்சிகளைப் பகுத்து விளக்கவில்லை சேலம் மாவட்டச் சிற்பக்கலை வரலாற்றை அறிந்துகொள்ளத் தெளிவான ஒரு நூல் இல்லை. சேலம் மாவட்டம் என்றால் அங்கே கோயிலும் உண்டோ? என்ற அளவில்தான் மக்கள் தெரிந்து இருக்கிறார்கள் பொதுவாகத் தமிழகத்தில் சிற்பக்கலையைப் பற்றியும் தனிக் கோயிலைப் பற்றியும் பல ஆய்வுகள் நடந்துள்ளன. இரண்டு தலைமுறைகளாகப் பல ஆய்வு நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் வெளிவருகின்றன; வெளிவந்து கொண்டு இருக்கின்றன.

**பயன்:** சிற்பங்களையும், கல்வெட்டுக்களையும் ஆய்வதால் பயன் என்ன?

1) கோயில் அமைப்பு, சிற்பங்கள், ஆகியன காலத்திற்குக் காலம் மாறுபடுவன. ஆதித்த சோழன் காலக் கோயில்களில் பூதகணவரி, யாழிவரி முதலியன இடம் பெறுகின்றன (ஆத்தூர்) முதல் குலோத்துங்கன் காலக் கோயிலில் நரலோகவீரன் மண்டபம் அமைக்கப் பட்டது மூன்றும குலோத்துங்கன் காலக்கோயிலை ஒட்டி நகரம் அமைந்தது (ஆரகழூர்).

நாயக்கர் காலக் கோயில்களில் கவின்மிக்க பலநிலை மாடங்களும் நிருத்த மண்டபத் தூண்களில் குதிரைவீரன் உருவமும் இவை போன்ற பிறவும் அமைக்கப்படும்.

இவ்வாறு வகைப்படுத்தும் பணிகளைக்கொண்டு கோயில் களின் காலத்தை வரையறுக்கலாம். மேலும் சிற்ப அமைப்பைக் கொண்டு அக்கால மக்களின் வாழ்க்கை, வரலாறு பண்பாடுகளைக் கண்டு தெளியலாம்.

2) கல்வெட்டுக்களைக் கொண்டு மொழியின் தொன்மை, மொழியின் அமைப்பு, கோயில் வரலாறு பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்கிறோம்.

3) தென்னிந்திய வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு ஆகியன படைப்போர்க்குப் பல புதிய செய்திகள் கிடைக்க வாய்ப்புண்டு. சான்று: அனுமந்தபுரத்தில் கிடைத்த சில பல்லவர் கால நடுகற்களால் ஈஸ்வர வர்மனும், பரமேஸ்வரவர்மனும் ஒருவரே என்பதைத் துணியமுடிகிறது. தென்னாவூர்க் கல்வெட்டு ஒன்றால் மூன்றாம் குலோத்துங்கனுக்கு புவன முழுதுடையாளே யன்றி இளைய நம்பிராட்டியார் என்ற ஒரு பட்டத்தரசியும் இருந்தாள் என்பதை அறிகிறோம்.

4) ஊர்ப் பெயர்கள் காலப்போக்கில் மாறுவன. கல்வெட்டுக்கள் கூறும் ஊர்ப் பெயர்கள் தற்போதைய ஊர்ப் பெயர்களினின்றும் பெரிதும் திரிந்து வழங்குவதைக் காணலாம். ஊர்ப் பெயர் ஆய்வு செய்வோர்க்குக் கல்வெட்டுக்கள் கூறும் ஊர்ப்பெயர் பெரிதும் துணைசெய்யும் கல்வெட்டுக்கள் குறிக்கும் சில ஊர்ப்பெயர்களையும் அதன் தற்கால வடிவங்களையும் கீழே காணலாம்:

| | | |
|---|---|---|
| திரு ஆரைக்கல் | (கி. பி. 1229) | நாமக்கல் |
| ஆற்றூர் | (கி. பி. 911) | ஆத்தூர் |
| இடையாறு | (கி. பி. 892) | நன்செய் இடையாறு |
| இலத்திப்பாடி | (கி. பி. 1192) | இலத்திவாடி |

*கல்லிநத்தம் (கி. பி. 1509) கல்லாநத்தம்*
*தகடூர் (கி. பி. 890) தர்மபுரி*
*மங்கைவாரிப்பட்டி (கி. பி. 1527) மங்கப்பட்டி*
*வானவன் மாதேவி (கி. பி. 1227) வளையமாதேவி*

ஒரு நாட்டின் பெருமை, அந்த நாடு படைத்துள்ள இலக்கியம், கோயில் சிற்பம், ஆகியவற்ருல் நிலைபெறும். தென் இந்திய சிற்பக் கலையின் வளர்ச்சியை ஆழ்ந்து படிப்போர், சேலம் மாவட்டமும், மனித வரலாற்றின தொடக்க காலம் தொட்டே சிற்பக் கலையில் சிறப்பான வளர்ச்சி அடைந்து வந்திருப்பதைக் காணமுடியும். ஒரு மாவட்டத்தின் சிற்பக் கலையையும், கல் வெட்டுக்களையும ஆயுமுன் சில துறைகளில் தெளிந்த அறிவுத் தேவை.

1) ஒரு சிற்பத்தைப் பார்த்தவுடன் அதன் பாணியை வகுத்துக் கூறும் திறன். 2) கல் வெட்டுக்களைப் படி யெடுப்பதிலும், படிப்பதிலும் தேர்ந்த அறிவு 3) புகைப் படக் கலை அறிவு 4) தொன்மை எழுத்தாய்வு. 5) ஊர்ப் பெயர் ஆய்வு. 6) இலக்கிய வரலாறு. மொழி வரலாறு, நாட்டு வரலாறு போன்ற பல துறை களில் நுட்பமானப் பார்வை, ஆகியவை தேவைப் படுகின்றன.

**ஆய்வுப் பரப்பு :**

சேலம் மாவட்டம், தமிழ்நாட்டில் உள்ள ஒரு மாவட்டம். வடக்கே தர்மபுரி மாவட்டமும், தெற்கில திருச்சி மாவட்டமும், மேற்கே கோயம்புத்தூர் மாவட்ட மும், கிழக்கே வட, தென் ஆர்க்காடு மாவட்டங்களும் அமைந்துள்ளன. ஏறத்தாழ 8634 சதுர கிலோ மீட்டர் பரப்பைக்கொண்ட இம்மாவட்டம், ஓமலூர், ஏர்காடு, சேலம், சங்ககிரி, திருச்செங்கோடு, இராசிபுரம், ஆத்தூர், நாமக்கல், என்ற எட்டு வட்டங்களைக் கொண்டது.

1961ஆம் ஆண்டின் கணக்கெடுப்புப்படி இம்மாவட்டத்தில் 1191 கோயில்கள் இருந்தன இவற்றுள் தருமபுரி மாவட்டம், நீங்கலாகச் சேலம் மாவட்டத்தில் மட்டும் 750 கோயில்கள் உள்ளன. இவற்றைக் கீழ்க்காணும் பட்டிகையில் காணலாம்.

## சேலம் மாவட்டக் கோயில்கள்

| வட்டங்கள் | அறநிலைய ஆணைக்குட் பட்டவை | ஆணைக்கு உட்படாதவை | மொத்தம் |
|---|---|---|---|
| ஓமலூர் | 73 | 14 | 87 |
| ஏற்காடு | 2 | 4 | 6 |
| சேலம் | 135 | 11 | 146 |
| சங்ககிரி | 50 | 5 | 55 |
| திருச்செங்கோடு | 89 | 9 | 98 |
| இராசிபுரம் | 68 | 7 | 75 |
| ஆத்தூர் | 85 | 9 | 94 |
| நாமக்கல் | 175 | 14 | 189 |
| மொத்தம் — | 677 | 73 | 750 |

இம்மாவட்டக் கோயில் வரலாற்றில் முக்கிய பங்கு வகிப்பவை, கிராமத் தேவதைக் கோயில்கள். 36 விழுக்காடு சிவன் கோயில்கள். 20 விழுக்காடு வைணவக்

கோயில்கள் 25 விழுக்காடு. விநாயகர் கோயில்கள் 8 விழுக்காடு. முருகன் கோயில்கள் 3 விழுக்காடு. ஏனைத் தெய்வக் கோயில்கள் 8 விழுக்காடு காணப்படுகின்றன.

இம்மாவட்டம் முழுதும் சிவனுக்கு 87-க்கும் மேற்பட்ட பெயர்கள் வழங்கப்படுகின்றன. பெரும்பான்மைச் சிவன் கோயில்கள் சிற்ப சாத்திரக் கூற்றுப்படி ஊர் எல்லைப் புறத்தில்தான் அமைந்துள்ளன. எனினும், ஏனை மாவட்டச் சிவன் கோயில்களின் அமைப்பினின்றும் சில மாற்றங்கள் காணப்படுகின்றன. அவற்றை அவ்வப் பகுதிகளில் காண்போம்.

கல் வெட்டுக்கள் :

இம்மாவட்டத்தில் 500-க்கும் மேற்பட்ட கல் வெட்டுக்கள் காணக்கிடைக்கின்றன எனினும், அரசினர் இதுவரை சுமார் 250 கல்வெட்டுக்களைப் படியெடுத்து, அவற்றுள் 30 கல்வெட்டுக்களின் மூலங்கள் மட்டுமே பதிப்பித்துள்ளனர். இதுவரை கிடைத்த கல்வெட்டுக்கள் பெரும்பான்மை கோயிற்சுவரில்தான் காணப்படுகின்றன. இவ்வாய்விற்காக எடுத்துக்கொண்ட சேலம், ஆத்தூர், நாமக்கல் ஆகிய மூன்று வட்டங்களில் இருந்து கிடைத்த கல்வெட்டுக்களின் எண்ணிக்கை பின் வருமாறு :

| வட்டம் | ஊர்கள் | கல் வெட்டுக்கள் | வெளியிட்ட ஆண்டு |
|---|---|---|---|
| ஆத்தூர் | ஆத்தூர் | 5 | ARE 1912 |
| | தம்மபட்டி | 3 | ,, 1913 |
| | தெடாவூர் | 9 | ,, ,, |
| | ஆறகழூர் | 48 | ,, ,, |
| | செந்தாரப்பட்டி | 5 | * ,, |
| | பேளூர் | 4 | * ,, |
| | தம்மம்பட்டி | 1 | * ,, |

| வட்டம் | ஊர்கள் | கல் வெட்டுக்கள் | வெளியிட்ட ஆண்டு |
|---|---|---|---|
| சேலம் | சேலம் | 17 | ARE 1888 |
| | உத்தமசோழபுரம் | 3 | ,, ,, |
| | பனமரத்துப்பட்டி | 1 | ,, 1918 |
| நாமக்கல் | நாமக்கல் | 10 | ARE 1906 |
| | கபிலமலை | 1 | ,, 1929 |
| | நஞ்செய்இடையாறு | 1 | ,, 1913 |
| | கொல்லிமலை | 20 | ,, 1929 |
| | நைனாமலை | 1 | — — |

*இவை இக்கட்டுரையாளரால் படியெக்கப்பெற்றன.

**ஆய்வு அடிப்படைகள் :**

இந்த ஆய்வுக்கு இந்திய வரலாற்றை அறிந்து கொள்ளப் பெருந்துணையாக இருக்கும், கல்வெட்டு அறிக்கைகள், மூலப் பதிப்புகள் சங்க இலக்கியம். தேவார திருவாசகம், தல புராணங்கள். ஆகிய பல்துறை நூல்கள் அடிப்படையாக அமைந்துள்ளன அத்துடன் வரலாறு, சிற்பக் கலை, சொற்பிறப்பியல், ஆகிய பல துறை நூல் களும் பெருந்துணையாகும். மேலும் என் களஆய்வில் (Field Work) உறவினர், நண்பர், அற நிலையத்தார் கொடுத்தக் குறிப்புக்கள் பெரும் பயனுற அமைந்தன.

**ஆய்வு நெறியும் அமைப்பும் :**

கால எல்லையும், பக்க எல்லையும் வரையறுக்கப் பட்டமையின் இவ்வாய்விற்காகச் சேலம் மாவட்டத்துள் ஆத்தூர், சேலம், நாமக்கல், ஆகிய மூன்று வட்டங்களே

களனும். இவ்வாய்வு நூலில் (1) முதற்கண், சேலம் மாவட்டச் சிற்பக்கலையின் தோற்ற வளர்ச்சியை முதல் இயலில் (Chapter) விளக்கிய பின்; (2) இரண்டு மூன்று நான்காம் இயல்களில் முறையே பல்லவர்காலக் கோயில்கள், சோழர்காலக் கோயில்கள், நாயக்கர்காலக் கோயில்கள், பற்றி அறிகிறோம். பல்லவர் காலம் தொடங்கி, நாயக்கர் காலம் ஈருக உள்ள சுமார் 17 தனிக்கோயில்களின் வரலாறும்; இடம், ஊர்ப்பெயராய்வு, கோயில் அமைப்பு, புராணச் செய்திகள், கலவெட்டுக்கள, முதலியனவும் இப்பகுதியில் இடம் பெறுகின்றன.



# 2. சேலம் மாவட்டச் சிற்பக்கலையின் தோற்றமும் வளர்ச்சியும்..

[தோற்றம் - கலைப் பருப்பு - புதிய கற்காலம் - பெருங்கற்படைக் காலம் - நடுகற்கள் - சதிக்கல் - சக்திக்கோயில்கள் - ஐயனார் கோயில்கள் - பாண்டவர் கோயில்கள் - கிராமதேவதைக் கோயில்கள்-நாகக்கல் - நரபலிச் சிற்பங்கள் - கொல்லிப்பாவை -சமணர்காலம் - பௌத்தர் காலம்.]

**தோற்றம் :**

மனிதன் தோன்றி வளர்ந்த காலத்தில் கலைகளும் தோன்றின இக்கலைகளே மனிதனை விலங்கினின்றும் பிரித்து மனிதனை மனிதனாகக் காட்டின என்று கூறுவர்[1]. கற்கால மனிதன் தோன்றி 10 லட்சம் ஆண்டுகள் ஆகின்றன என்றும், அக்கற்கால மனிதன் சுமார் 60,000 ஆண்டுகளுக்கு முன்பே நற்கால மனிதனைப்போல் வளர்ச்சியடைந்திருக்கலாம் என்றும், சோவியத் அகழ்வாய் வாளர்கள் கணிக்கின்றனர்[2]. டாக்டர் லக்கி (Dr LUCKY) என்பார், பழைய கற்கால மனிதன் 3 முதல் 4 அடி உயரமுடையவனாக இருந்தான் என்றும் அவன் பேசவும் கற்கருவிகள் செய்யவும் தெரிந்திருந்தான் என்றும் நெருப்பின் பயனை அறிந்திலன் என்றும் அவன் வாழ்ந்த காலம் 18 லட்சம் ஆண்டுகளுக்கு முன் என்பதையும விளக்கி ஒரு அறிக்கை வெளியிட்டார்[3].

---

(1) Nestyuk, 'QRIGIN OF MAN' Foreiga Lanquagess Publishing House Moscow,

(2) நா. வானமாமலை, 'கலையின் தோற்றம்' ஆராய்ச்சி துலை-1971 பக். 279

(3) Times of India 5-4-1964

*கலையின் பிறப்பிடம்:* சோவியத் ஆய்வாளர் கருத்தை ஏற்றுக்கொண்டால், கலையுணர்வோடு வாழ்ந்த மனிதனின் காலம் இன்றைக்கு 60 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரென்பது தெளிவு. இவ்வாறு வாழ்ந்த மனிதர் தம் கலைகளின் ஆதியிருப்பிடம் எது என்பதைப் பல ஆய்வாளர் விளக்கத் தலைப்பட்டனர்.

எச். ஜி. வெல்சு (H. C. Wells) என்பார் இந்தியாவை உள்ளடக்கிய ஒரு நிலப் பகுதி கடலுள் மூழ்கி விட்டது என்றும் அங்குத்தான் மனித இனம் தோன்றிற்று என்றும் கூறுகிறார்[4]. திரு. கிருஷ்ணசாமி ஐயங்கார், தக்காணமே ஆதி மனிதனின் தொட்டில் என்று பல சான்றுகள் காட்டி விளக்குகிறார்[5]. சேர் யோவன் இவான்சு, பிருத்தானிய மக்கள் பேரவையில் சென்னை மாநிலமே ஆதிமனிதனின் தொட்டில் என்று தெளிவு படுத்துகிறார்[6]. மதிப்பிற்குரிய அறிஞர் ந. சி. கந்தையாப் பிள்ளை அவர்கள், தமிழகம் உலகத்தின் கலைகளுக்கெல்லாம் தொட்டிலாக விளங்கிய தென்பதை பல மேனாட்டுப் புதைபொருள் ஆய்வாளர் கருத்துக்களைக்கொண்டு நிறுவியுள்ளார்[7]. பண்டைய சென்னை மாநிலத்தில் இருந்து புரூஸ்பூட்டு (Bruce Foote) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட பல நூற்றுக் கணக்கான பழைய, புதிய கற்காலப் பொருட்கள், தொல்லியல் வல்லுநர்களை விழிப்புறச் செய்துள்ளன. இம்மாநிலத்தில் இருந்து கிடைத்த கற்கருவிகளைக் கொண்டு சென்னை மரபு (Madras Industry) என்று பெயரிட்டு வழங்கினர்[8]. இக்கருவிகள் பிரெஞ்சு நாட்டில்

(4) H. G Wells, 'OUTLINE OF HISTORY' PP. 14 and 76.
(5) S. Krishnasami Aiyangar,, 'A Short Sketch of the Ancient History of South India' - Indian Science Congress Hand Book;
(6) Na. C. Kandayappillai, 'PRE-HISTORIC TAMILS'. P. 10
(7) ந. சி. கந்தையா பிள்ளையின், 'சிவம், Prehistoric Tamil, தமிழகம், தமிழர் சரித்திரம், முதலிய நூல்களில் காணலாம்.
(8) Mortimer wheeler, 'Early India and Pakistan'.

'அபவில்லி' என்ற இடத்தில் கிடைத்த கருவிகளின் அமைப்பை ஒத்து இருப்பதால் இவற்றை அபவில்லியின் மரபு என்றும் வழங்குவர். கலைப்பண்பாட்டுடன் வாழ்ந்த இம்மக்கள் வாழ்ந்த காலம் ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று ஆய்வாளர்கள் கணிக்கிறார்கள்.

இவ்வாறு பல வரலாற்று ஆசிரியர்களும், தொல்லியல் வல்லுநர்களும், கலையின் பிறப்பிடங்களுள் தமிழகமும் ஒன்று எனபதை தெளிவுபடுத்திச் சென்றதைக் காணலாம்.

கலைப் பகுப்பு: அகழ் வாய்வில் இதுவரை நமக்குக் கிடைத்த பொருட்களைக்கொண்டு சிற்பக்கலையின் வளர்ச்சியை நான்கு வகையாகப் பகுப்பர்[9].

1. விலங்குருவப் படைப்புக் காலம்
2. மனித உருவப் படைப்புக்காலம்
3. மனித உருவப் படைப்புக் காலம்
4. தெய்வ உருவப் படைப்புக் காலம்

இவற்றுள் முதலாவது வரலாற்றுக்கு முற்பட்டதென்றும்; இரண்டாவது வரலாற்றுத் தோற்ற காலம் என்றும்; மூன்றும், நான்கும் வரலாற்றுக் காலத்தைச் சேர்ந்தவை, என்றும் கூறுவர். வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனின் எண்ணம், செயல் அனைத்தும் வேட்டையாடுவதிலேயே இருந்தது. அக்காலத்தில் மிருகங்களை வேட்டையாடி அவற்றின் எலும்புகளைக்கொண்டு பல பொருட்களையும்; கூறிய கற்களைக்கொண்டு பல படங்களையும் வரைந்தான்[10]. தான் வாழ்ந்த குகைகள், கற்பாறைகள் முதலியவற்றில் குதிரை, மான், காண்டா மிருகம், போன்ற படங்களை வரைந்தான். தெற்குப்

(9) டா. வானமாமலை, 'கலையின் தோற்றம்.' ஆராய்ச்சி 1971 பக். 280.

(10) Paul J Sachs, 'Great Drawings'. P. 3.

பிரான்சில் உள்ள ஒரு குகையில் ஐந்து மான்களின் தலைகள் வரையப்பட்டுள்ளன. இது இரண்டாம் உலகப் போர் நடந்தபோது பிரஞ்சுப் பள்ளி மாணவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது[11]. இதன் காலத்தை, கி. மு. 30,000-க்கு முற்பட்டதென்பர்[12]. இவ்வகைப்படங்கள் தழைச்சாறுகளைக் கொண்டு வரையப்பட்டதோடு அவற்றுக்கு மிருகங்களின் குருதியும், மனிதக் குருதியும் வண்ணமாகத் தீட்டப்பட்டன. மனிதனின் பண்பாடு வளர வளர மனிதத் தலையும் விலங்குருவும் கொண்ட கோட்டு ஓவியங்களைத் தீட்டினன். இவ்வகை வரை கோட்டு ஓவியங்கள் தட்பவெட்ப நிலைகளால் தாமாக அழிந்தோ அல்லது அழிக்கப்பட்டோ போகும் தன்மை யுடையன எனவே, அவ்வோவியத்தின் மீது கற்கருவி களைக் கொண்டு புடைப்புச் சிற்பங்களைச் செதுக்கத் தொடங்கினன்[13]. இதுவே பின்னர், முன்னும் பின்னும் தெரியக்கூடிய தனிச் சிற்பங்களாக உருவெடுத்தன. மூன்றும் நான்காம், கட்டத்தில் மனித உருவங்களும் சிற்பங்களாகப் படைக்கப்பட்டன.

**புதிய கற்காலம்:** இந்தியாவின் கற்காலத்தைப் (1) பழைய கற்காலம், புதிய கற்காலம் என இரண்டாகப் பகுத்து இவற்றின் காலத்தை முறையே கி மு. 1,00,000 கி. மு. 6,000 என உயர் எல்லை வகுத்துள்ளனர். சேலம் மாவட்டத்தில் இருந்து இதுவரை பழைய கற்காலப் பொருட்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. புதிய கற்காலப் பொருட்கள் நூற்றுக்குமேல் கிடைத்துள்ளன. இவை பெரும்பாலும்; சேர்வராயன் மலை,

---

(11) Ibid - P. 4.

(12) Fornand windels, 'The Lascaux cave Paintings Viking Press.

[13] சி. சத்தியமூர்த்தி, 'சிவலிங்க வழிபாடு.' பக். 2.

கல்ராயன் மலை, கொல்லி மலை, வத்தலமலை, மேலகிரி, குட்டிராயன்மலை போன்ற மலைகளில் அழிந்துபட்ட கிராமப் பகுதிகளில் கிடைத்தவை. இவற்றுள் 70 கற் கோடரிகள்[14]. 5 சுத்திகள், 3 தேய்ப்புக் கற்கள், 3 பானைக் கழுத்துக்கள்[15]. ஒரு வளையக்கல், ஒரு குழவிக்கல் (Muller) முதலியன குறிப்பிடத்தக்கன.

தேய்ப்புக்கல், நெய்த துணிகளைத் தேய்த்துப் பள பளப்பாக்க பயன்படுவது. எனவே அக்கால மக்கள் நெசவுத் தொழிலில் சிறந்திருந்தமை பெறப்படுகிறது. சுத்தி, உளி, வளையக்கல் பல கிடைப்பதால் வேளாண் தொழில் செய்தார்கள் என்பதும், கைக்கோடரிகள் பல கிடைப்பதால் மிருகங்களை வேட்டியாடி வாழ்ந்தனர் என்பதும்; பெரும் பானைக் கழுத்துக்கள் சில கிடைப்ப தால், களிமண்கொண்டு, தாழிகள் செய்யக் கற்றிருந் தனர்[16]. என்பதும் பெறப்படும், மேலும் இரண்டு அங்குல விட்டமுள்ள வட்ட ஒடுகள் பல கிடைத்துள்ளன. இவை பதிலிப் பணமாகவோ அல்லது, ஒருவகை விளை யாட்டுப் பொருளாகவோ பயன்பட்டிருக்கவேண்டும்.

---

[14] 3 Hornblendic gneiss was obtained, by E. Aqarme from some deserted Villages.

[15] M. S. Hights collection from Mangalam in Servaray hill.

[16] Zeunper has proved by scientific test that even the clay balls were made by men in the old stone age period see in J.R.A.I. PP. 65-70.

பெருங்கற்படைக்காலம்: இரும்பின் பயனை அறிந்த மக்கள் வாழ்ந்த காலத்தை, இரும்புக் காலம் அல்லது பெருங்கற்படைக்காலம் என்பர் இக்காலத்தில் கிடைத்த இரும்புக் கருவிகள் ஈமத்தாழிக் கல்லறைகளில் இருந்து கிடைத்ததால் இப்பெயர் பெற்றது. (GK. Megas – பெரிய, lithos – கற்படை).

மானிட இயல்வல்லுநர் கைமண்டார்பு (Haimendorf) காக்கேசியாவில் இருந்தே பெருங்கற்படைகள் இந்தியா வந்ததென்றும், இரும்பின் பயனை அவர்களே இந்தியாவில் அறிமுகப்படுத்தினர் என்றும், இக் காக்கேசியரே திராவிடர்கள் என்றும் கூறுவது தவறு எனக் கருதுவர் சிலர்[17]. ஆழ்ந்து நோக்கின், பண்டைத் தமிழ்க் குடியினரும் இரும்பின் பயனை அறிந்திருந்தார்கள் எனபது தெளிவுறும்.

பண்டைக் காலத்தில் தமிழர்கள் இரும்பிலிருந்து எஃகு உருக்குச் செய்ய கற்றிருந்தனர் என கிரேக்கப் புலவர் கூறியுள்ளனர். கி மு. 8000 ஆண்டுகளுக்கு முன்னர் எகிப்தியர் சேலத்து எஃகினால் செய்த உளி, சுத்திகளைப் பயன்படுத்திக் கல்லறைக் கோபுரங்களைக் கட்டினர் என்று எஃகு ஆய்வாளர் சே. எம். கீத், சர். சே சே. வில்கின்சன ஆகியோர் குறிக்கின்றனர்[18]. கி மு. 327-இல் கிரேக்க மன்னன் அலெக்சாந்தர் இந்தியா மீது படையெடுத்து வந்தபோது புருசோத்துமன் என்னும் வடவரசன், இப்பகுதியில் இருந்து வெட்டியெடுக்கப்பட்ட 38 பவுண்டு எஃகைக் கொடையாக அளித்தான் என வரலாறு கூறும் இம்மாவட்டத்தில் சுமார் 34 இருபபு

(17) எஸ். இராமகிருஷ்ணன், 'இந்தியப் பண்பாடும தமிழரும்' மீனாட்சி புத்தக நிலையம் - பக். 40.

(18) புலவர் குழந்தை, 'கொங்குநாடு'. பக். 100.

உருக்குப் பட்டறைகள் இருந்ததாகத் தோமசு காலந்து (Thomas Holland) குறிப்பிட்டுள்ளார்[19]. இங்கு தயாரிக்கப்படும் இரும்புக் கட்டிகள் செங்கல் வடிவிலும், கூம்பு வடிவிலும் உருக்கி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன[20]. இவ்வாறு தமிழக இரும்புக்கால வரலாற்றில் சேலம் மாவட்டம் முக்கிய பங்கு வகிப்பதைக் காணலாம் இம்மாவட்டத்தில் இருந்து இரும்புக்கால மக்கள் பயன படுத்தியப் பொருட்கள், சிலைகள், அணிகலன்கள் பல கிடைத்துள்ளன. புரூஸ்பூட்டு, வீமிங்கு என்போர் 25-க்கும் மேற்பட்ட பொருட்களைக் கண்டுபிடித்துள்ளனர் அவைப் பெரும்பாலும் பாண்டவர் தாழிகளில் (Carin) இருந்து கிடைத்தவை. மற்றும் சில சதுரக் குழிகளில் (Dolmen) இருந்து கிடைத்தவை. பானையைச் சுற்றி மூன்று படுக்கைக் கற்களை நட்டு அதன்மேல் ஒரு பலகைக் கல்லைக் கிடத்துவர். இது சதுரக்குழி, அல்லது நிறைகல் தெற்றி என்று வழங்கப்படுகிறது சேலம் மாவட்டத்தில் இவ்வகைத தாழிகள் பல திறக்கப்பட்டு சோதனைகள் நடத்தப்பட்டன. இன்னும் பல குழிகள் திறக்கப்படாமல் இருக்கின்றன. பள்ளிப்பாளையம், தளவாய்ப்பட்டி, மஞ்சினி, அழகாபுரம், போன்ற பல ஊர்களில் இவ்வகைத தாழிக்குழிகள் இருப்பதாக சீவல் குறிக்கிறார். மேலும் வாசலூர், கல்லாநத்தம், போன்ற பகுதிகளில் எண்ணிறந்த சதுரக் குழிகள் காணப்படுகின்றன. நாமக்கல் வட்டத்தில் மோகனூரில் ஒரு தாழியும்[22]. மூக்கனூர்ச் சேரி என்ற இடத்தில் ஒரு கற்

(19) Thomas Holland, 'Iron ore and Iron Industries of the Salem District II Hand Book No. 8. 1892
(20) SDG Part II P. 272.
(21) Mr. R. Sewell, 'List of Indian Anti Quities.'
(22) DHAVM, 'Exploration in District Salem'. in I.A. 1961-62, P. 29.
(23) ibid — 62-63 P. 13

கிடையும்[23]. சின்னக்கோட்டூர் தின்னக்கோட்டூர், கெங்கலேரி, செயனூர், நீரிலகிரி, ஒபிலசுப்பள்ளி, போன்ற ஊர்ப்புறங்களில் பல கற்கிடைகள் உண்டென்றும் நரசிம்மையா குறிக்கிறார்[24].

இப்புதைகுழிகளில் இருந்து கிடைத்த நகைகள் நைட்ரிக் அமிலத்திலும் கரையவில்லை என டாக்டர் ஹண்டர் (Hunter) குறிக்கிறார்[25]. மற்றும் சில தாழிகளில் இருந்து கிடைத்த இரும்புக் கருவிகள் பெரும்பான்மை கத்திகள், ஈட்டிகள், கொக்கிகள் ஆகும்.

*கோபுரத் தாழிகள்* (Hut wrns : இவ்வகைத் தாழிகள் வடிவத்தில் ஒரு குடிசையின் அமைப்பை ஒத்திருக்கின்றன. இவ்வகைத் தாழிகளை உரோம நகரமக்கள் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இது வடிவில் கிராமத் தேவதைக் கோயில்களின் அமைப்பைக்கொண்டு விளங்குகின்றன. இவ்வகைத் தாழி ஒன்று சேலத்திற்கு இரண்டு கல் கிழக்கில் ஒரு வயலில் கண்டதாக புரூசுபூட்டு கூறுகிறார்[26]. தற்காலத்தில் அது தெய்வமாக வழிபாடு செய்யப் படுவதாகவும், அதில் விளக்கேற்றி வைக்கப் படுவதாகவும், அத்தெய்வம் நிலத்தைக் காத்து மிகுந்த வருவாயைக் கொடுப்பதாகவும் குறிப்பிட்டுள்ளார். இவை கிராம தேவதைக் கோயிலின் அமைப்பை யொத்துக் காணப்படுவதால், பிற்காலக் கோயில் தோற்றங்களுக்கு இவை காரணமாக அமைந்தன என்பதொருதலை இதைப் போன்ற தாழிகள் ஏனோ இந்தியா முழுதும் கிடைக்க

---

(24) Narasimhaiah, 'Exploration in Districts north Arcot and Salem, in I. A. 1664-65. P. 22

(25) Mauice Phillips,' 'Tumli in the Salem District Indian Antiquary' Vo II P. 223.

(26) Bruce foote, 'Indian Pre - historic and Proto - historic Antiquities' - P. 35.

வில்லை. இது உரோம நகரில் அல்போன் ஏரிகளில் கிடைத்த தாழிகளின் அமைப்போடு ஒத்துக் காணப் படுகிறது.

சுடுமண் பொம்மை: பீமிங்கு (H.W. Feeming) என்பார் காட்போர்த்து காட்டில் இருந்து ஒரு சுடுமண பொம்மை ஒன்றைக் கண்டு பிடித்துள்ளார். இதன் நிறம் இளஞ்சிவப்பாகக் காணப்படுவதாகவும், இது ஒரு பெண் உருவம் என்றும், இவள் தன் முடியை அழகாகச் சீவித் தலையின் உச்சியில் ஒரு சீப்பையும் செருகி இருக்கிருள் என்றும் குறிப்பிட்டுள்ளார்[27]. கி. மு. 600-க்கு முன்பு வாழ்ந்த இம்மாவட்ட மக்கள், இரும்பு, செம்பு, தங்கம், முதலியவற்றின் பயனை அறிந்திருந்தார்கள் என்றும்; இறந்தவர்களைத் தாழிகளில் இட்டும் புதைத்தனர என்றும்; சில பகுதிகளில் சுட்ட சாம்பலைக் கோபுரத் தாழிகளில் (Hut urn) நிரப்பிப் புதைத்தனர் என்றும் அறிகிரேம். களிமண் கொண்டு பொம்மைகள், தாழிகள், செய்யக் கற்றிருந்தனர் கிருத்துவுக்கு முன் வாழ்ந்த இம்மாவட்ட கற்கால, இரும்புக்கால மக்களின் கலைப் பண்பாடு. பற்றி ஓரளவு அறிந்துகொண்டோம் இனித் தற்காலத்தில் வேடியப்பன் என வழிபாடு செய்யப் படுப, நடு கற்கோயில் பற்றி விளக்கலாம்.

நடு கற்கள்: சேலம் மாவட்ட நடு கற்களை பற்றிக் கூறும் முன் தமிழ் இலக்கியங்கள் கூறும் நடுகல் வரலாற்றைச் சுருங்கக் கூறிப் பின் நடுகற்களைப் பற்றிக் காண்போம். பொதுவாக வீரத்தோடு போர் புரிந்து வீர மரணம் அடைந்த மறவர்க்கு நடுகல் நடுதல் தமிழாமரபு

(27) Brnce Foote, 'Indian Pre-historic and Proto historic Antiquities'. P. 35.

இவ்வாறு நடப்படும் நடுகல்லை (வீரக்கல்) நான்கு வகையாகப் பகுக்கலாம், (1) வடக்கிருந்தோர்க்கு நடுகல் [புறம்: 221] (2) வீரப்பத்தினிக்கல் (சதிக்கல்) [சிலம்பு: 22: 115] (3) போர்வீரர்களுக்கு நடுகல் [புறம்: 329] (4) நிரைமீட்சிப் போரில் இறந்தார்க்கு நாட்டிய வீரக்கல் [புறம்: 261] என்பன. நடுகல் பற்றித் தொல்காப்பியரின் புறத்திணையியலும், புறப்பொருள் வெண்பா மாலையிலும் விரிவாகக் காணலாம்

வேலினையுடைய இளையர் செவ்வாடையுடுத்திப் பொன் கழலும், தாரும், புனைந்து குதிரை மிசைத் தோற்றிப் போர் செய்வர் மாற்றார் அம்பு மறவன் உடலில் தாக்க விண்ணிடத்துச் செல்வான [பு. வெ, மா. 247]. அவன் உடலைத் தாழியில் கவித்தபின், அவன் வெற்றி உலகம் உள்ள அளவும், நிலைக்க அரசரும் படைத்தலைவரும், ஊராரும், கல் எடுக்க விழைந்து கல்லுள்ள இடத்தே சென்று தகுதியான கல்லைத் தேர்ந்தெடுப்பர். மறவனின் பெயரும் பெருமையும் பொறிக்க நாள் குறிக்கப்படும். இக்காலத்து மாலையும், மலரும், மதுவும், சந்தனமும் கொடுத்து, இதுவே இவ்வீரனுக்கு ஏற்ற கல் எனத் தமர் ஒப்புதல் கொடுத்த பின், கொண்டு வந்த கல்லை நீரிலிட்டுத் தூய்மை செய்யப்படும [நீர்ப்படை]. பின் ஓசைபட வண்டியேற்றி, கல்லினை நடும் நிலத்திற்குக் கொண்டு செல்வர். பலர் ஆர்ப்ப வண்டியில் இருந்து கல்லை இறக்குவர்.

*நிலத்தேர்வு:* இந்நடுகல் தழைகள் பெய்த பாழ்பட்ட நிலத்தில் நடப்பட்டன, [புறம்: 314:2-3] மேலும் ஊர் மன்றத்திலும் (சீறூர்ப்படை), நடைவழிச் சந்திகளிலும் (அதா) நடப்பட்டன. ஒரே நாளில் பல வீரர்களுக்குக் கல் எடுக்கப்படலாம், அங்ஙனம் எடுக்கப்பட்டால், எதிர் எதிராகக் கற்கள் நடப்பட்டன.

நடுதல்: மறவனது பீடும் பெயரும் பொறித்துக் கல் (பு. வெ. மா 251) நடப்பட்டது. நடுகற்கள் மடை கொடுத்து, மது தெளித்து, மலரும் கொடுத்துப் பீலிசூட்டி, நான்குவலகைப் பல்லியம் இயம்ப 'வீரனே' இக்கல் நின உருவமாக!' என்று கூவிக் 'குலவை'யிட்டு நடுவர். பின் நாட்டப்படுங் கல்லிற்குக் கோயிலும், மதிலும், வாயிலும் அமைக்கப்படும். நாளும் அவனது அடுபுகழ் பாடிக் காலே வழிபாடு செய்யப்படும். [புறம்: 329, 306, 260, 232] நடுகல் ஏறிய வீரனின் உறவினர்களுக்கு, நிலம் வழங்கப்பட்டது [புறம்: 285, 287, 312 ] இவை இலக்கியம் கூறும் செய்திகள்.

இவ்வாறு இறந்துபட்ட வீரனுக்கு நடுகல் எடுப்பது பல நாடுகளில் இருந்து வந்தது. மட்கலன் என்னும் சுமேரிய மன்னன், பகைவர் ஓட்டிச்சென்ற ஆனிரைகளை மீட்டுப் புறங்கண்ட ஞான்று கல் நாட்டியதைக் காட்டும் முத்திரைகள் பல சுமேரியாவிலும், சிந்துநதிப் பள்ளத் தாக்கிலும் கிடைத்துள்ளன[28].

இம்மாவட்டத்தில் பண்டைக்காலத்து நடுகற்கள் கிடைக்காமற் போனாலும், 5-ஆம் நூற்றாண்டில் இருந்து 15-ம் நூற்றாண்டுவரை உள்ளவை, ஏறத்தாழ 30-க்கு மேல் கிடைத்துள்ளன. அவை ஏரிக்கரை, ஓடைக்கரை, ஊர் எல்லைகள், போன்ற பல இடங்களில் பரவலாகக் காணப் படுகின்றன. பல ஊர்களில் இவற்றை வேடியப்பன் என்று வழிபாடு செய்கின்றனர். இந்நடுகல்லில் உள்ள வீரனின் உருவம் போர்க்கோல நிலையிலேயே உள்ளது வீரனின் ஒரு கையில் கத்தி உள்ளது; மற்றொரு கையில் கேடயமோ, வில்லோ உள்ளது. வீரனின் கால்புறத்தில்

(28) L. A. Waddell, 'The Makers of Civilization'. P. 109.

கெண்டி, சிமிழ் முதலியனவும் பக்கலில் பீடும் பெயரும், அரசனின் ஆட்சி யாண்டும் பொறிக்கப்பட்டுள்ளன.

இதுவரை கிடைத்தவை: இம்மாவட்டத்தில் இருந்து தமிழகத் தொல்பொருள் ஆய்வுத்துறை, புலவர் இராசு, வெங்கடாசலம், அ இராசேந்திரன், முதலியோர் பல நடுகற்களைப் படியெடுத்து படித்துள்ளனர். சில நடுகற்கள் கூறும் செய்தியை இங்குக் காண்போம்.

தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர் என்ற முத்தமிழ் வேந்தர் ஆண்டபோது, தகடூரைத் தலைநகராகக் கொண்டு (தர்மபுரி) வேளிர் எனும் குறுநில மன்னர் கொங்குநாட்டை ஆண்டனர். இவர்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்புக்கள் கிடைக்கின்றன[29]. வீரராயன் ஆட்சி தொடங்கி(கி.பி.143)இராக்கசகங்கன்(கி பி. 985) ஈருகச் சுமார் 31 கங்க மன்னர் ஆட்சி இப்பகுதியில் நிலவிற்று. கங்க மன்னர் நடுகற்கள் பெரும்பாலும் வட்டெழுத்தில் காணப்படுகின்றன. இருளப்பட்டியில் கிடைத்த இரண்டு நடுகற்கள், 5-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த தமிழ் – வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. ஒன்று, படையெடுத்துத் தாக்கவந்த எதிரியை முறியடிக்கச் சென்ற கங்க அரசனுக்கு, உதவியாக இருந்த பாண அரசனின் வீரமரணத்தைக் கூறுகிறது. மற்றொன்று, இரண்டு வீரர்களின் வீரமரணத்தைப் பற்றிக் குறிக்கிறது. இவ்வீரர் மரணம் விண்ணவர்மனின் 3-ம் ஆட்சியாண்டில் நிகழ்ந்திருக்கவேண்டும்[30].

கோதையாற்றில் கிடைத்த சிம்மவிட்னுவின் 14-ஆம் ஆட்சியாண்டு (கி. பி. 589) நடுகல், பெரும்பாணரைசர்

(29) பதி, பத்து, 87, 90, அகம்-44., சிலம்பு 25: 156-8.

(30) தமிழகம். Vol. I P. 15.

மக்கள் பக்தபராவனுர் சேவகன் வன்னலூர் பாவன் போரில் இறந்துபட்ட செய்தியைக் குறிக்கிறது. இம் மன்னனின் 33-ஆம் ஆட்சியாண்டு நடுகல் ஒன்ருல்[31]. இவன் ஆட்சி கி. பி. 589 வரையிருந்தது தெளிவாகிறது.

சிவமாறனின் மூன்ரும் ஆட்சியாண்டு (கி பி. 682) நடுகல் நவலே என்ற இடத்தில் கிடைத்துள்ளது. இது பெருமலே நாட்டு மன்னன் கந்த வாஸனதியரையரால், பெருமண்கோடல் என்ற கோட்டை பிடிபட்டபோது கொட்டிஉண்ணி என்பான் உயிர்விட்டதைக் குறிக் கிறது[32]. கிளி ஏரியில் உள்ள ஒரு வட்டெழுத்து நடுகல் பூங்குடி வடுகன் வடவல்லூர் என்னும் இடத்தில் குதிரை மீது வந்த ஒருவனேத் தாக்கியபோது இறந்ததைக் கூறுகிறது[33]. அனுமந்தபுரத்தில் கிடைத்த ஈச்சுவர வர்மன், பரமேச்சுவரவர்மன் நடுகற்கள், இவ்விரு மன்ன ரும் ஒருவரே என்ற கருத்திற்கு இடம் கொடுக்கின்றன[34]. இவையேயன்றி சின்னகௌண்டன்பட்டி, இளவம்பட்டி. கடத்தூர்[35]. நெருப்பூர்[36]. பள்ளிப்பட்டி[37]. போன்ற இடங்களில் 9-ஆம், 10-ஆம் நூற்ருண்டு நடுகற்களும் கிடைத்துள்ளன.

*செந்தாரப்பட்டி:* இவ்வூரில் ஆறு நடுகற்கள் காணப்படுகின்றன. இவற்றுள் ஐந்தில் வட்டெழுத்துக் கல் வெட்டுக்கள். இந்நடுகற்களில் வீரனுக்கு அருகில் குமிழ், கண்ணுடி போன்ற பொருட்கள் இல்லே. தமிழும்

(31) 30 of Narasinganallur.
(32) தமிழகம். Vol. I P. 15.
(33) ibid. P. 16
(34) அ. இராசேந்திரன், 'தமிழகத்தில் நடுகற்கள்'. இளவேனில். Vol. I பக். 125.
(35) 1/1972 செங்கு தொல் எழுத்து. பக். 250.
(36) 2/1972 ,, நவம் '72, பக், 286,

வட்டெழுத்தும் கலந்த 6-ஆம் 7-ஆம் நூற்றாண்டு மொழி அமைப்பைக் கொண்டன.

வீரன் ஒரு கையில் கேடயமும், மற்றொரு கையில் கட்டாரியும் ஏந்தியுள்ள ஒரு நடுகல், "*நீல கங்கரைசர் பெருமக்கள் போய்[ர்] செய்து வூர் சென்ற ஞான்றட்டு போர்பட மருதான் எருப்பட்டான் ஒழிபடுகல்*" - எனக் குறிக்கிறது. கங்க அரசர் போர் செய்து ஊர் திரும்பு கையில் மருதன் எதிர்ந்து போரிட்டு உயிர்விட்ட செய்தி யைக் கூறுகிறது. இதில் நடுகல், ஒழிபடுகல் என்று குறிக்கப்படுகிறது.

இதையொட்டி அமைந்துள்ள மற்றொரு நடுகல், வட்டெழுத்தில் உள்ளது. வீரன் ஒரு கையில் கட்டாரியும், மற்றொரு கையில் வில்லும் வைத்துள்ளான். இக் கல் வெட்டு,

"*நீல கண்டனே*
*மகனே [த]ண்இ*
*எதிர்ந்து*
*பட்டான்று*
*கொள்ளிச் செல்ல*
*சோளபுரச் - படைத்தான்.*"

எனக் குறிக்கிறது இக் கல்வெட்டுச் செய்தி; நீல கண்டன் என்பானின் மகன் தனியனாகப் பகைவரோடு போரிட்டு உயிர்விட்டான். அவன் நினைவாக இவ்வூரார் கல் எடுத்த செய்தியைக் குறிக்கிறது. இவ்வூரைச் சோழபுரம் எனக் குறிப்பதால், இவ்வூருக்கு முன் சோழபுரம் என்ற பெயர் இருந்தமைப் பெறப்படும்.

சதிக்கல்: கணவன் இறந்தவுடன் மகளிர் தீக்குளித்து மாய்ந்து விடுவதைச் சதி என்பர். இது சங்ககால மரபு. ஆய் ஆண்டிரன் இறந்தபோது அவன் மனைவியர் உடன்கட்டை ஏறியதாக அவன் அவைப் புலவராகிய குட்டுவன்கீரனூர் கூறுவார். (புறம்: 240). பூதப்பாண்டியன் தேவி உடன்கட்டை ஏறியது தான் புறநானூற்றிலுள்ள இரண்டு பாடல்களில் கூறப் படும்பொருள் (புறம்: 246, 247). கிருத்துவுக்கு முன்னரே வடமேற்கு எல்லைப் பகுதிகளிலும், வட இந்தியாவிலும் அரச குலத்தினரிடையே சதி இருந்ததென்று இசிட்ராபோ (கி. மு. 20) கூறுகின்றார். இங்ஙனம் இறந்த மகளிரின் நினைவாக நிறுவப்படும் சின்னத்தைச் சதிக்கல் அல்லது பத்தினிக்கல் என்பர். இதில் வளை பூண்ட ஒரு கை காண்பிக்கப்படும். இது கணவருடன் என்றென்றும் சேர்ந்து வாழ்ந்து வளைபூண்ட கையை உடைய மகளிராகத் திகழ்வதைக் குறிக்கிறது. செதுக்கு வேலைகள் ஒன்றுமின்றி உயரமாக நாட்டியிருக்கும் கற்களைக் கேரளத்தில் பல இடங்களில் காணலாம். அவற்றைப் படைக்கல் என்றும் புலச்சிக்கல் என்றும் கூறுவர். இவற்றைப் பத்தினிப் பெண்டிற்காக எடுக்கப்பட்ட சதிக்கல் எனப் பேராசிரியர் இளங்குளம் குஞ்ஞன்பிள்ளை குறிக்கிறார்[40]. இவை சாதாரணமாக எட்டு அல்லது பத்து அடி உயரமுடையனவாகக் காணப்படுகின்றன, திருச்சூர் மாவட்டத்தில் குட்டூர் என்ற இடத்திலிருக்கும் ஒரு கல் 26 அடியும், இன்னொன்று 18 அடி உயரமிருப்பதாகக் கூறப்படுகிறது. இவ்வகைக் கற்கள், சேலம் மாவட்டத்தில் பரவலாகக் காணப்படுகின்றன.

---

(40) இளங்குளம் குஞ்ஞன் பிள்ளை "பண்டைய கேரளம்" பக். 48.

இப்மாவட்டத்தில் பல ஊர்களில் பழந்தமிழர்சேரி (ஆதிதிராவிடர்) தோறும் வீரமாத்திக்கோயில் (வீரமா பத்தினிக் கோயில்) உண்டு. இவை கணவருடன் உடன் கட்டை ஏறிய வீரப் பெண்மகளிரின் நடுகற்கோயில் என்பர். 'கரும அந்திரத்தில் கல் எடுக்க முடியாது' என்பது சேலம் மாவட்டப் பழமொழி. சங்ககிரி·வட்டம், எடப்பாடிக்கு கீழ்ப்பால் உள்ள நத்தக்காடு என்ற ஊரில் ஒரு வீரமாத்திக் கோயில் உண்டு. இதில் பத்தினிப் பெண்டிர் எழுவரின் சிலைகளும், ஒரு வீரமாத்திச் சிலையும், இவற்றின் முன் ஓர் முன்அடியான் சிலையும் காணப்படு கின்றன.

சக்திக் கோயில்கள்: சிவனுடன் தொடர் புடைய தெய்வம் சக்தி. சக்தியை வழிபடும் இந்துக்களைச் சாக்தர்கள் என அழைப்பர். உலகத்துச் சக்திகளுக் கெல்லாம் இவளே காரணமென மார்க்கண்டேய புராணம் கூறும். இவள் வரலாற்றைத் 'தேவி மகாத்மியம்' என்ற வடநூல் விரிவாகக் கூறும். இச்சக்தி வழிபாடு பற்றிப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், முதலியன பரவலாகப் பேசுகின்றன. இச்சக்தி வழிபாடு ஐரோப்பிய, ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளிலும் காணப்படுகின்றன எகிப்து பாபிலோன், பெர்சியா, கிரீஸ், போன்ற நாடு களில் வீரத்தாய் (Great Mother) என்று பெயரிட்டு இவ்வழிபாடு செய்யப்படுகிறது. கேரளத்தில் சக்தியைப் பகவதி என்றும், கன்னடத்திலும், ஆந்திரத்திலும் காளி என்றும், தெலிங்கானத்தில் சோகுலாம்பிகை என்றும் வழங்கி வணங்கப்படுகிறது[41]. இம் மாவட்ட சக்திக்

(41) பி. ஆர். சீனிவாசன், 'நாம் வணங்கும் தெய்வங்கள்' பக்.13.

கோயில்கள் எட்டுவகையாகப் பகுக்கப்படுகின்றன[42]. (1) மாரியம்மன், (2) எல்லம்மன், (3) அங்காளம்மன், (4) பிடாரி, (5) செல்லியம்மன், (6) சாமுண்டி (7) காளி, (8) துர்க்கை. இதையொத்த சக்திக் கோயில்கள் மேலும் பல உள. அவை நாச்சியம்மன், கங்கம்மன், பொக்காளியம்மன், பூரணியம்மன் எனப் பலவாருக வழங்கப்படுகின்றன.

கொல்லிமலையில் 200-க்கும் மேற்பட்ட ஊர்களில் காளிக்கும், மாரிக்கும், பிடாரிக்கும் கோயில்கள் உள. சனிக்கிழமைகளில் இக்கோயில்களில் சிறப்பு வழிபாடுகள் செய்யப்படுகின்றன. மாரியம்மைக்குக் கோயில் இல்லா ஊர் இல்லை எனலாம். இரெட்டியூரில் மாரிக்கு அலகு குத்தி விழா எடுக்கப்படுகிறது. மேச்சேரி, தாரமங்கலம் போன்ற ஊர்களில், காளிக்கு உயிர்ப் பலியிட்டு விழாக்கள் எடுக்கப்பட்டன. தற்போது இல்லை. டாக்டர் எல்மோர் இந்துக்கள் கடவுள், மனிதவாழ்க்கையோடு தொடர்புடையன என்பார்[43]. இவர் கருத்திற்குச் சான்று பகர்வனபோல் இச்சக்தி வழிபாட்டில் பல தாய்த் தெய்வ வழிபாடுகள் இணைக்கப்பட்டுள்ளன. நாட்லி கொடுக்கப்பட்ட பெண்களும், தகாதமுறையில் கொலை செய்யப்பட்ட பெண்களும் பல சக்திகளாக வழிபாடு செய்யப்படுகின்றனர். பெண்ணாகரத்தை அடுத்துள்ள பாளையம் ஏரிக்கரையில் ஒட்டம்மாள் என்ற ஒரு சக்திக் கோயில் உண்டு. இக்கோயில், இவ்வேரி வெட்டிய போது ஒரு ஒட்டச் சிறுமியை நரபலி கொடுத்து அவளுக்காக எடுக்கப்பட்ட கோயிலாகும்[44]. இதைப்போன்றே

---

(42) SDG. P. 118-20

(43) Dr. Elmore. 'The Dravidian gods in Hindu Religion.

(44) SDG. P. 120.

தன் சகோதரர்களுக்குக் காலம் தாழ்த்தி மதிய உணவுக் கொண்டுவந்தாள் எனக் கொலை செய்யப்பட்ட போதிளியம்மாவும் தன் கற்புக்குக் களங்கம் கூறிய சகோதரர்களின் துணையில் வாழவிரும்பாது உயிர்விட்ட கனகம்மாவும்[45]. கணவனைக் கொன்ற கள்வர்களைக் கொன்று மயிர்முடித்த ஜக்கம்மாவும்; குற்றம் செய்யாத் தன்னைத் திருடி என்று ஊரார் கூறுவதைப் பொருது உயிரை மாய்த்துக்கொண்ட லிங்கம்மாவும், இன்று சக்திகளாக வழிபாடு செய்யப்படுகிறார்கள். இவற்றுள் கண்ணகி வழிபாடும் ஒன்று. கேரளத்து விசாரிகா பகவதி கோயிலில் பாடப்படும் மந்திரம், *'ஆதிமுதல் காவிரிப்பூம்பட்டினத்தி லாயிரவர் வங்கிசத்தில்'* எனத்தொடங்கி, *ஆனைக்குளம், வளர்பகவதி அம்மையே ஆனந்த மகமாயே!'* என்று முடிகிறது. இதிலிருந்து கேரளத்தில் பகவதி வழிபாட்டில் கண்ணகி வழிபாடும் இணைந்துள்ளமை தெளிவுறும்.

மொகஞ்சோதாரோ, அரப்பா, புதை பொருட்களில் பல தேவி உருவச் சிற்பங்கள் கிடைத்துள்ளதால், இச் சக்தி வழிபாடு 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டதென்பதும் அறியப்படும்.

**ஐயனார் கோவில்கள்:** சாதவாகனன் என்றும் சாத்தன் என்றும் வழங்கப்படும் ஐயனார், சிவனுக்கும் மோகினிக்கும் பிறந்தவராகப் புராணங்கள் கூறும் இவர் கோயில்கள் பெரும்பாலும் ஊர் எல்லைகளில்தான் அமைந்துள்ளன இக்கோயில்களில் செங்கல், மண், சுண்ணாம்பு ஆகியவற்றால் ஆன குதிரைகள் அழகியபெரிய வடிவங்களில் அமைக்கப்படும். ஐயனார் தெய்வத்திற்கு

(45) N. Venkata Ramanayya. 'An essay on the origin of the South Indian Temple. P. 27.

விரதம் பூண்டவர் பலர் சேர்ந்து இக்குதிரைகளைச் செய்து காணிக்கையாக வைப்பர். இவ்வழிபாடு 'குதிரையெடுப்பு' என வழங்கப்படுகிறது. இத்தகைய மண் உருவங்களை செய்யும் வழக்கம் சங்க காலத்திற்கு முற்பட்டதென்பர்.[46] மணிமேகலையில் சுதையினால் செய்யப்படும் உருவங்களைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.[47] ஐயனார் கோயில்கள், ஆதித்த சோழன் காலத்தில் ஆலம்பாக்கம், உக்கல் போன்ற ஊர்களில் இருந்தன.[48] பெரும்பாலும் சேலம் மாவட்டத்தில். ஆத்தூர் வட்டத்தில் வில் இவை மிகுதி. நாமக்கல், இராசிபுரம், வட்டங்களில் அருகியேக் காணப்படுகின்றன. ஐயனார் கொல்லிமலை மலையாளிகளின் விருப்ப தேவதைகளுள் ஒன்று என்றும் கருதப்படுகிறது.[49] புத்தர், 'சாத்தன்', என்று அழைக்கப்பட்டதால் ஐயனார், பண்டைய பௌத்த சமயத் தெய்வமாக இருந்து பின் இந்து சமயத் தெய்வக் கூட்டத்தில் சேர்க்கப்பட்டது.

**பாண்டவர் கோயில்கள்:** சேலம் மாவட்டத்தில் திரௌபதியம்மன், தர்மராசா கோயில்கள் பல உள இவை பெரும்பாலும் மரத்தினடிகளிலும் ஊர் எல்லைகளிலும் அமைந்துள்ளன. பிப்ரவரி - மார்ச் மாதங்களில் இத் தெய்வங்களுக்குச் சிறப்பு வழிபாடு செய்யப்படுகிறது. இதை அக்கினித் திருநாள் என்பர். இது 18 நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. இதைப்போன்ற

---

(46) மா. இராசமாணிக்கனார், 'தமிழகக் கலைகள்' - பக். 46.

(47) 'வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய கண்கவர் ஓவியம் கண்டு நிற்குநரும.'

(48) S. R. பாலசுப்ரமணியம், 'முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்' பக் 71; 201.

(49) SDG. P. 163.

விழாக்கள் பெங்களூரிலும் நடைபெறுகின்றன.[50] பெரும்பாலும், இவ்வகைக் கோயில்கள் எல்லா ஊர்களிலும் உள்ளன. எடப்பாடியிலும், ஆத்தூரிலும், சிறப்பாக விழா எடுக்கப்படுகிறது.

**கிராம தேவதைக் கோயில்கள்:** இவ்வகைக் கோயில்கள் பேய், பிசாசு, கறுப்பு என்று பலவாற்றான் வழங்கப்படும் தேவதைகளின் பால் எழுந்த அச்சத்தால் எழுப்பப்படுவன. இவை மக்களுக்குத் தொல்லை தராமல் இருக்க ஆண்டுதோறும் உயிர்ப்பலி இடப்படும். இவ்வகைக் கோயில்கள் சேலம், தர்மபுரி மாவட்டங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஊர் எல்லைகளில், மர நீழலில் அமைந்துளளன. இங்கெழுந்தருளியுள்ள இறைவனை முனி, என வழங்குவர். இவ்வகையில் கோயில் கொண்ட தெய்வங்களை வட்டத்திற்கு வட்டம் வேறு பெயரில் வழங்குவர். சிவம்பட்டி, இருளப்பட்டி, அரசம்பட்டி பகுதிகளில், வேடியப்பன் என்றும், நாமக்கல், இராசிபுரம், வட்டங்களில் நாவலடியான், முனியப்பன் என்றும், ஆத்தூர், சேலம் பகுதிகளில் மதுரை வீரன், கருப்பண்ணன், சந்தியப்பன்[50] என்றும் அழைப்பர். இக்கோயில்களில் இருந்தே நமக்குப் பல நடுகற்கள் கிடைக்கின்றன. பக்கம் 16-ல் நடுகல் பற்றி விளக்கினோம்.

**நாகக் கல்:** மணம் முடித்தும் பல ஆண்டுகளாகியும் மகப்பேறு இன்மையால் இப்பிறவியிலோ அன்றி முற்பிறவியிலோ நாகத்தைக் கொன்ற ஊழ்வினை எனக் கருதி, அவ்வினை தீர அரச மரத்தடியில் நாகக்கல் நட்டு வழிபடுவர். இந்நாக வழிபாடு நாகர்கள் என்ற இனத்தாரின் குல இலச்சினை என்றும், இவ்வழிபாடு இந்தியா

(50) சேலம்-ஆத்தூர் குறுக்குச் சாலையில் இவ்வகைக் கோயில்களைக் காணலாம்.

வில் காணப்படுவதுபோலவே, சீனு. பெரு, ஆப்பிரிக்கா, பாபிலோன், எகிப்து முதலிய நாடுகளில் புகழ்பெற்று இருந்தது என்றும் ஒல்ட்காம் குறிக்கிறார்[51]. மோசே யால் செய்யப்பட்ட வெண்கலப் பாம்பு யோகோவாக் கடவுளின் சின்னமாக வழிபடப்பட்டது.

சங்ககாலத்தில், மக்கள் பாம்பை வழிபட்டு (மலைபடு: 197-202) அதற்கு உணவளித்த குறிப்புக்களும் (பெரும் பாண்: 232–33) சங்க இலக்கியங்களில் காணலாம். தற்காலத்து இந்நாகக் கற்கள் அரசமரத்தடியில் நட்டு வழிபாடு செய்யப்படுகின்றன. இக்கல்லில் இரண்டு அரவங்கள் பிணைந்தவாறு பொறிக்கப்படுகிறது.

சிலவற்றில் அரவுடன் உடலும் மனிதத்தலையும் காணப்படும். இவ்வகை நாகக்கல் இம்மாவட்டத்தில் ஊர்தோறும் காணலாம். அயோத்தியாப்பட்டணத்தில் ஒரு கல் வெட்டுடன், ஒரு நாகக்கல் (Primitive-naga-Stone) இருப்பதாகக் கல்வெட்டறிக்கை கூறுகிறது.

*நரபலிச் சிற்பங்கள் : தமிழகத்தில் தொன்று தொட்டு கிராம தேவதைகளுக்கு விழாக்கள் நடைபெற்று வந்தன. அவ்விழாக்களில் ஆடு, கோழி, பன்றி ஆகிய முப்பலி இடப்பட்டது. 'சிலம்பும் கழலும் புலம்புஞ்சீறடி, வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவைக்கும்', முருகனுக்கும், உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கம் வழிவழி யாக வந்திருக்கின்றது. கொற்றவைக்கு உயிர்ப்பலி கொடுத்தல் ஆகமக் கொள்கைகள் பரவிய காலத்திலும் இருந்ததென்று ந. சி கந்தையா பிள்ளை கருதுவார்[52]

(51) Oldham, 'The Sun and the Serpent' Ch. X-XI.

* அ. இராசேந்திரன். 'நரபலிச் சிற்பங்கள்' தமிழ்ப்பொழில், மார்ச்-73 பக. 357-60.

(52) ந. சி. கந்தையாப் பிள்ளை, வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழர், பக். 122.

மனிதனை நரபலியிடும் வழக்கம் தொன்றுதொட்டு உலக நாடுகள் அனைத்திலும் இருந்துவந்த ஒன்று. ஆப்பிரிக்காவில் பண்டை விழாக்களில், ஆண்டுதோறும் நூறுபேரைப் பலிகொடுத்து வந்தனர். கோண்டா, நைசி லாந்து போன்ற நாடுகளில் நரபலி தொன்றுதொட்டு வழிபாட்டின்போது கொடுக்கப்பட்டு வந்தது. மெக்சிகோ வில் நாகவழிபாட்டில் தெய்வமேறி ஆடும் கூத்துக்களில் நரபலியும் இடம் பெற்றிருந்தது.[53] ஆப்பிரிக்காவில் டெஹோச்கா பகுதியில் ஒவ்வோர் ஆண்டும் ஈராயிரம் பேர் களை இறைவனுக்குப் பலியிட்டனர்.[54] அமெரிக்காவில் கிடி, பவனி, என்ற இனத்தோரிடையே இப்பழக்கம் புகழ்பெற்று விளங்கிற்று. பவனி என்ற இனத்தார் தம் நிலங்களை உழுவதற்கு முன் தம் இனத்துச் சிறுமிகளைப் பலியிட்டு அவர்தம் செங்குருதியால் நானிலத்தை நனைத்த பின்னரே பயிர்த்தொழில் துவங்கினர்.

எகிப்து, பாலத்தீனம், போன்ற நாடுகளில் நரபலி கொடுத்தல் கி. மு. 3000-க்கு முன்பிருந்தே வழக்கத்தி லிருந்தது. சுமேரிய மன்னர்களின் நினைவுச் சின்னங்கள் (Sumerian Rayal Tombs) நரபலியிட்ட பின் எழுப்பப் பட்டவை.[55] ஜப்பானிலும் கிராம தேவதைகளுக்கு நர பலியிடப்பட்டதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். கர்த்தர் எகிப்து தேசத்து மனிதருள் முதல் பிள்ளைகளை நரபலியிடும்படி கேட்டதையும், (யாத்திராகம்: 13-2) முதல் பேறுகள் யாவையும் கொன்ற செய்தியையும், (யாத் 13-15) பைபிள் கூறுகிறது. மேலும் நரபலியைப் பற்றி பழைய ஏற்பாட்டில் இருந்து பல சான்றுகள் காட்டலாம்.

(53) ibid பக், 90.

(54) Encyclopedia Brittanica. Vol. II P. 937.

(55) Encyclo pedia Brittanica. Vol. II P. 830.

*தமிழ் இலக்கியச் சான்றுகள்:* தமிழ் இலக்கியங்கள், பல உயிர்ப்பலிச் செய்திகளைத் தெளிவாக்குகின்றன. ஒரு அன்னை தாம் வழிபடும் முருகனுக்கு ஆட்டுக் குட்டியைப் பலியிட்ட செய்தியும். (நற்: 47-9) கொற்றவைக்குப் பசுவைக் கொன்று பலியூட்டிய செய்தியும். (அகம். 309:4-6) காணப்படுகின்றன. தாம் வழிபடும் கடவுளுக்குக் குருதியுடன் பிசைந்து உணவைப் படைத்தனர் (நற் 345: 3-5) சங்க இலக்கியங்களில் நரபலி பற்றிய குறிப்புக்கள் இல்லை. நரபலி கொடுக்கும் முறை முதலில் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுகிறது. நரபலியைக் கீழ்க்காணுமாறு வகைப்படுத்தலாம்.




*நவகண்டம் கொடுத்தல்:* இது கடமையுணர்ச்சியின் பால் போர் வீரர்களோ, ஆண் மக்களோ தம் விரதம் முடிந்தபின் தம் உடல் உறுப்புகளைத் தருதல். இக்கொடையில் எயினர்கள் முன்னணியில் நின்றனர்.[56] கலிங்கத்துப் பரணி வீரர், தம் தலைகளை அரிந்து கொற்றவைக்குக் கொடுத்த பின் குறை உடல் கும்பிட்டு நிற்கும் நிலையைக் கூறும்.[57] Dr ஓகேல், கொற்றவைக்குத் தலையை அறுத்துக் காணிக்கையாகத் தருதல் பக்தர்தம் மன உறுதியை நன்கு விளக்கும் என்பார்.[58] "அண்மையில்

(56) சிலம்பு. வேட்டுவவரி 19-21.

(57) கலிங்கத்துப்பரணி - கோயில் பாடியது. பாடல். 14

(58) Prof. Nilakanta Sastri's Translation of Dr, Oagale's Bulletin of School of oriental Studies in Kalai. mahal. Ap, 32 No. 4.

கிடைத்த ஒரு நடுகல் வீரனொருவன் தன் கடமை முடிந்த பின் தன் தலையைக் கொற்றவைக்கு அறுத்துப் பலியாகக் கொடுத்ததைக் கூறும்.[59] திருசைலம் கல்வெட்டு, பல வீரர்கள் தங்கள் தலைகளையும் நாக்குகளையும் காளிக்குக் கொடுத்த செய்தியைக் கூறுகின்றது.[60]

*உயிர்ப்பலி:* இம்முறை காவிய காலத்திற்குச் சற்றுப் பிந்தையதன்று. மக்களிடையே வீரம் குறைந்து அச்சம் பிறக்கத் தலைப்பட்டது. தம் உயிரை பலியிட அஞ்சிப் பிறரைப் பலியிடத் தலைப்பட்டனர். இப்பலி *களப்பலி, சாவாரப்பலி* என இருவகைப்படும்.

*களப்பலி :* தெய்வத்திற்கு அரசனோ, மக்களோ வயது வந்த ஆண்மகனைப் பலிகொடுத்தல். கொங்கர் பல கொல்லரைக் கண்ணகிக்காகப் பலியிட்டு வேள்வி செய்திருக்கின்றனர்.[61] இப்பலி வடக்கில் தொன்று தொட்டு இருந்து வருகிறது. சதபதப் பிராமணம் என்ற வடநூல் 185 ஆண்மக்களை வெட்டி வேள்வி வேட்ட செய்தியைக் கூறுகின்றது.[62] வடநாட்டில் தற்போதும் இம்முறை உண்டு என்பதற்குச் சான்றாகத் தமிழ் நாளிதழ் ஒன்றில் வெளிவந்த செய்தியைக் காட்டலாம். கஞ்சி பர்வு என்ற இடத்தில் சிட்லாகோயில் தேவதைக்கு நரபலி கொடுக்க நடந்த முயற்சி காவலர்களால் தடுக்கப் பட்டுள்ளது.[63]

*சாவாரப்பலி :* கொற்றவைக்கு 12 வயதுச் சிறுவனைப் பலியாகக் கொடுத்தல். கொங்குநாட்டில் இம்முறை

(59) கல்வெட்டியல், பக். 155.
(60) IMP. Vol. II P. 954.
(61) உரைபெறு கட்டுரை. சிலம்பு. பக். 31.
(62) Sathapatha brahmana S.B.E. Vol. XLIV; Part V. P. 410
(63) 'நரபலி முயற்சி தடுப்பு' - செய்தி: தினமணி 19-2-72.

மிக அதிகமாகப் பரவியிருந்தது. சிறுவர்களைக் கொற்றவைக்குப் பலிகொடுத்த பின் அச்சிறுவர்களைப்போல் சிலை செய்வித்துக் கோயிலின் முன் நிறுத்தி வழிபாடு செய்யப்பட்டது. இதைப்பற்றிய செய்திகளைச் 'சோழன் பூர்வ பட்டயம்' மிக விரிவாக எடுத்துக் கூறுகின்றது.[64] இச்சாவாரப்பலி, சென்னிமலை, பேரையூர், அவிநாசி, கண்ணனூர், அருணபுரி, மதுரை, மன்னியூர் போன்ற ஊர்களில் கொடுக்கப்பட்டு வந்த செய்தியும், சமயமுதலி தம் இனத்தாரிலேயே சில சிறுவர்களைப் பலியிட்டு, மேற்கொண்டு இப்பலி நடவாமல் இருக்க ஒரே நாளில் 12 சிறுவர்களை வெட்டிப் பலிகொடுத்ததோடு நரபலி நின்றது என்றும் இப்பட்டயம் செப்புகிறது. தற்காலத்தில் இம்மாவட்டத்தில் உள்ள கொற்றவைக் கோயில்களில் உள்ள முன் அடியான் என்ற சிற்பங்கள் இச்சாவாரப் பலிச் சிற்பங்களாக இருக்கலாம். இம்முன்னடியானுக்குப் பூசைசெய்த பிறகே இறைவனுக்குப் பூசை நடைபெறும். தற்போது பல காளி கோயில்கள் வழிபாடு செய்யப்படாமல் பாழடைந்து கிடக்கின்றன. தேவி நரபலி கேட்டதாகவும் அதுமுதல் வழிபாடு நிறுத்திவைக்கப்பட்டதாகவும் கூறப்படுகின்றது. ஆறகழூர், ஆத்தூர், மேச்சேரி, தாரமங்கலம், போன்ற ஊர்களில் சில ஆண்டுகளுக்கு முன் வரை எருமைப்பலி வழக்கில் இருந்தது. ஒரேநாளில் 200-க்கு மேற்பட்ட எருமைகள் பலியாகும். ஆறகழூர் படைக்களத் திருவிழாவில் பல நூற்றுக்கணக்கான எருமைகள் பலியிடப்பட்டன என ரிச்சரிசு கூறுவார்.[65] தற்போது இவைகள் அரசால் தடுக்கப்பட்டுவிட்டன.

---

(64) 'சோழன் பூர்வபட்டயம்'—C. M. Ramachandran Chettiar. G. M. L. Madras. P. 122.

(65) SDG. Vol. I Page. 295.

தற்போது கொற்றவைக்கு நரபலி கொடுக்கும் வழக்கம் இல்லாவிடினும் மாற்றாக சில முறைகளைக் கையாளுகின்றார்கள் குழந்தைகளுக்காக வேண்டிக் கொண்ட பெற்றோர், குழந்தையுருவச் சிலை செய்து கோயிலின் கோபுரத்திலோ அல்லது முன் வாயிலிலோ நிறுத்திவைப்பர். மற்றும் சிலர் மயிர், நகம், இவற்றைக் கொடுக்கின்றனர். இவ்வாறு கொடுக்கப்படும் பலி, பழைய நரபலியின் ஞாபகமே என ந.சி.கந்தையா பிள்ளை கூறுவது ஈண்டு அறியற்பாலது.

**கொல்லிப்பாவை:** கொல்லிப்பாவைப்பற்றித் தமிழ் இலக்கியத்தில், பல்வேறுபட்ட கருத்துக்கள் நிலவு கின்றன. ஒன்றோடு ஒன்று முரணி நிற்கும் நிலையில் உண்மை எது எனக் காண்பது கடினம். அவ்வுண்மை காணப் பல தமிழ் அறிஞர்கள் முயன்றுள்ளனர்.

திரு. ஆலால சுந்தரம், கொல்லிப்பாவை தேவர்க ளால் அரக்கர்களின் துன்பத்தினின்றும் தப்புவதற்காகத் தேவதச்சனைக் கொண்டு கொல்லிமலையின் மேற்குப் புறத் தில் நிறுத்திவைக்கப்பட்ட ஒரு இயந்திரப் பாவை என்பார்.[69] சிலர் இதை ஓவியம் என்று கூறுவர். அறப் பள்ளி ஈச்சுவரன் ஆலயத்திற்கு மேற்றிசையில் இப் பாவை இருந்ததாகக் '*கொல்லிமலை அகராதி*' என்ற ஒரு பழஞ்சுவடி குறிக்கிறது.[70] இப்பாவை கல்லால் செய்யப் பட்டதென்றும் கருதுவர்.[71] இப்பாவை அழகிய மோகினி வடிவு கொண்டு கண்டாரது உயிரைக் குடிக்கும் எனக் கொங்குமண்டலச் சதகம் கூறுகிறது.[72]

---

(69) இயற்றமிழ். 'கொல்லிப்பாவை' - பக், 60.
(70) கொங்குமண்டல சதகம், மூத்துசாமிக் கோனார்.
(71) அபிதான சிந்தாமணி, சிங்காரவேலு முதலியார். பக். 511.
(72) கொங்குமண்டல சதகம், செய்: 22.

இப்பாவையை இயற்றியவன் தேவதச்சன் என்று உரையாசிரியர்கள் கூறுவர். இப்பாவை தெய்வத்தால் செய்துவைக்கப்பட்டது என்று (நற்: 192) கூறுவதால் கடவுள் என்ற சொல்லுக்குத் தேவதச்சன் என்று உரை கூறுவர்.

இப்பாவை, சக்தியின் மறு அவதாரமாக இருக்கலாம். நிர்வாண தந்திராவின் கூற்றுப்படி இந்தியாவில் உள்ள அனைத்துத் தெய்வங்களும், காளியின் மறு அவதாரங்கள் என்பார்.[73] கதிரவனின் இளவெய்யில் அப்பாவையின் மீது வீசிப் புதுமையான வனப்புடன் காட்சி தருகிறதெனக் (நற்:192) குறிக்கப்படுவதால் இவ்வுருவம் கோயிலிலோ, அன்றிக் கோயில் சுவரிலோ அமைந்த சிற்பமோ, ஓவியமோ அல்லவென்பது தெளிவு கொல்லிமலையகராதியின் கூற்றுப்படி சிவன்கோயிலின் மேற்றிசையில் இருந்தது என்பதற்குச் சான்றுகள் இல்லை. இவ்வகராதி காலத்தால் மிகப் பிற்பட்டது. மேலும் சங்ககாலத்தில் சிவன் கோயில் கொல்லிமலையில் இருந்ததென்பதற்குச் சான்றுகள் இல்லை. இப்பாவை சுதை மண் உருவமாகவோ அல்லது கல் சிலையாகவோ இருக்கலாம். 'ஆரஞரெவ்வமுயிர் வாங்கும்' - என்ற (கலி. 60) பாடலும், கண்டாரை மயக்கும் எனக் குறுந்தொகை 100-ஆம் பாடலும். கண்டாரை மயக்கச்செய்யும் இளஞ்சிரிப்புக்கொண்டு விளங்கியது எனக் கொங்குமண்டலச் சதகமும் கூறுவதால், இப்பாவை புன்சிரிப்பையுடைய காம உணர்ச்சியைத் தூண்டிவிடும் ஒரு பிறந்த மேனிப் பாவை உருவமாக இருந்திருக்கலாம்.

இப்பாவை ஓரிக்குரிய கொல்லிமலையில் உள்ளதென்றும், (சிறுபாணு. 100) ஓரியைக்காரி வென்றுசேரல்

(73) E. B. Hawell, Indian Sculpture and Painting. P. 180.

இரும்பொறைக்குத் தந்தான் என்றும் (அகம். 209) கூறப் படுதலான் இப்பாவை ஓரியின் முன்னோர் ஒருவரால் நிறுவப்பட்டதாதல் வேண்டும்.

சமணர்காலம் : சேலம் மாவட்டம் முழுவதும் கங்கமன்னர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தபோது சமணக் குகைகள் பல குடையப்பட்டன. முதலாம் கொங்கணி வர்மன் ஆட்சிக்காலத்தில், சேலம் மாவட்டம் முழுவதும் இவன் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இவனே சிம்மநந்தியின் கட்டளைப்படி காந்தபுரத்தில் சமணக் கோயிலைக் கட்டினான்.

பெருங்கதையாசிரியர் கொங்குவேளிர் தமிழ்ச் சங் கத்தை நிறுவித் தமிழை வளர்த்ததோடன்றிப் பல சமணக் கோயில்கள் கட்டவும் காரணமாக இருந்தார். இன்று இம்மாவட்டம் முழுவதும் பல தீர்த்தங்கரர்களின் சிற்பங் களும், சமணப் படுக்கைகளும், சமணக் கோயில்களும் காணப்படுவதால், கங்கர் ஆட்சிக் காலத்தில் சமணர் சிற்பக் கலை வளர்ச்சி பெற்று இருந்தது. தர்மபுரியில் உள்ள மல்லிகார்சுனன் கோயில் சமணத் தீர்த்தங்கரர் மல்லிநாதருக்காகக் கட்டப்பட்டதாகத் தெரிகிறது[74] இவ்வூருக்கு அருகில் உள்ள இராமக்கா குளக்கரையில் உள்ள சமணத் திருவுருவங்களை நோக்கின் ஒருகாலத்தில் இவ்வூர் சமணத் திருப்பதியாக இருந்திருக்கவேண்டும் எனலாம்.

தர்மபுரி, கோட்டை மாரியம்மன் கோயிலின் உடைந்துபட்ட ஒரு தூண் கல்வெட்டு, மகேந்திர பல்ல வனின் ஆட்சியில் சமணக் கோயிலுக்குக் கொடுத்த கொடையைப்பற்றிக் கூறுகிறது.[75] அதமன்கோட்டை

(74) IMP. Vol. II P. 1212.
(75) 348 of 1901.

என்ற ஊரில் இரண்டு சமணக் கோயில்கள் உள. இக் கோயிலுக்கு அருகில் ஒரு சமணத் திருமேனி காணப்படு கிறது.[76] இவ்வூரை அடுத்துப் பருத்திப்பள்ளி என்ற ஊரில் சமணத் தீர்த்தங்கரரான ஆதிநாதர் சிலையும், பல சமணர் சிலைகளும் காணப்படுகின்றன. இன்று இம் மாவட்டம் முழுவதும் பல இடங்களில் அமணலிங்கம் என்னும் பெயரால் பல சமணர் சிலைகள் அகப்பட்டுள்ளன. சேலம் திருமணிமுத்தாற்றின் கரையில் ஒரு சமணத் திரு வுருவம் காணப்படுகிறது[77] சேலம் தண்டல்நாயகம் (Collector) வீட்டிற்கும் சர்ச்சுக்கும் இடையில் ஒரு சமணத் திருமேனி காணப்படுகிறது.[78]

திருச்செங்கோட்டு மலைமீது இரண்டு இயற்கைச் சமணர் குகைகளில் ஐந்து கற்படுக்கைகளைக் (Rock Shelter) காணலாம்.

பொதுவாகச் சமணர் கோயில்கள் சைவ கோயிலின் அமைப்பை ஒத்து விளங்கும். மூலவர் பிறந்த மேனியாக வும், பரிவாரத் தெய்வங்கள் ஆடைபெற்றும் விளங்கும். மூலவர் நின்ற கோலமாகவோ, வீற்றிருக்கும் கோல மாகவோ அமைந்திருப்பதைக் காணலாம்.

சமணமும், சைவமும் போட்டியிட்டு வளர்ச்சி யடைந்தபோதும், விட்டுணு வர்த்தனன் என்ற சோழ ஆணையாளன் கங்கபாடியில் பல சமணக் கோயில்களை அழித்தான். அடிக்கடி பிராமணர்களுக்கும் சமணர்களுக் கும், நடந்த பூசல்களில் சமணம் அழியத் தலைப்பட்டது. இவ்வகைக் கலகங்கள் ஆத்தூர் வட்டத்தைத் தவிர ஏனைப் பகுதிகளில் மிகத் தீவிரமாக இருந்ததாக ஒரிரு

(76) மயிலை சீனி. வெங்கடசாமி. 'சமணமும் தமிழும்,' பக். 165.
(77) Journal of the Asiatic Society of Bombay. XIV P. 76.
(78) SDG. Vol. I P. 240.

கூறுவார்.[79] தற்போது இம்மாவட்டத்தில் சமணர்களின் ஆதிக்கம் குறுகிவிட்டாலும், ஒருகாலத்தில் சீரும் சிறப்பும் பெற்று இருந்தார்கள் என்பதைக் கல்வெட்டுக்களும், சமணத்திருவுருவங்களும் ஊர்ப்பெயர்களும் சான்று பகர்கின்றன

**பௌத்தர் காலம் :** மதுரைக்காஞ்சி, சிலப்பதிகாரம், மணிமேகலை, போன்ற இலக்கியங்களில் பௌத்த மதம் பற்றிய குறிப்புக்கள் காணப்படினும் இம்மாவட்டத்திற்குப் பௌத்தம் எப்போது வந்தது என்பதற்குச் சான்றுகள் கிடைத்தில. அசோகன் காலப் பிராமிக் கல்வெட்டு ஒன்று.[80] அசோகன் சோழ, பாண்டிய நாடுகள், தாமிரபரணி வரை தம்மடிப்படுத்திய செய்தியைக் குறிக்கிறது. இதை ச்சான்ருகக்கொண்டு,கி.மு. 258-க்கு முன் தமிழகத்தில் புத்தமதம் பரவியிருந்தது என்பர். அசோகன் இக்காலத்தில்தான் பல பௌத்தர்களைத் தமிழகத்திற்கு அனுப்பினுர். தன் மகன் மகேந்திரன்,மகள் சங்கமித்திரை ஆகிய இருவரையும், தமிழகத்திற்கு அனுப்பிய செய்தியை வரலாற்ருசிரியர் குறிப்பிடுகிருர்கள்.

இக்காலத்தில் இம்மாவட்டம் முழுதும் பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருத்தல் வேண்டும். பல இடங்களில் கிடைக்கும் புத்தர் சிலைகள் இதற்குச் சான்று பகர்கின்றன. காலத்தால் பௌத்தம் அழியத் தலைப்பட்டபோது பல பௌத்த கோயில்கள், மடங்கள், அழிக்கப்பட்டு விநாயகர் கோயிலையும், தர்மராசா கோயிலையும் கட்டினர். எனவே பௌத்த சிற்பக் கலை வரலாற்றை விளக்கப் போதுமான சான்றுகள் கிடைத்தில. இம்மாவட்டத்தில் புத்தர் சிலைகள் பெரும்பாலும் ஆத்தூர் வட்டத்தில்தான்

(79) Dr. Oppert, 'Original Inhabitats of India' P. 61.
(80) Rock Edict. III.

மிகுதியாகக் காணப்படுகின்றன. நாமக்கல் வட்டத்தில் கொல்லிமலையில் ஒரு புத்தர் சிலை இருப்பதாகக் கூறப் படுகிறது. ஆத்தூருக்குக் கிழக்கில் 15 கல் தொலைவில் தியாகனூர் (தியாகன்: புத்தரின் பெயர்) என்ற ஒரு ஊர் உண்டு. இவ்வூரில் இரண்டு புத்தர் சிலைகள் காணப்படு கின்றன. ஒன்று ஆரகழூர் நெடுஞ்சாலையில் தென்பால் உள்ள ஒரு புத்தர் கோயிலில் 9 அடி உயரமான கருங் கல்லாலான புத்தரின் சிலை, அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறது.

ஊரார் இப்புத்தருக்கு எண்ணெய்பூசிப் பட்டை நாமமிட்டு வைத்துள்ளார்கள். இச்சிலையின் அமைப்பைக் கொண்டு நோக்கின் 6, 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தாயிருக்கலாம். இக்கோயிலில் இருந்து அரைக்கல் தெற்கே சென்றால் சுமார் 6 அடி உயரமான கருங்கல்லால் ஆன புத்தர் சிலையொன்று அமர்ந்த நிலையில் காட்சி தருகிறது. நெல் வயலின் ஊடே காட்சிதரும் இப் புத்த ரின் மூக்கு சிதைந்துள்ளது. (படத்தில் காண்க) இதன் காலம் 7-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என்பர்.[81]

ஆறகழூர் ஈச்சுவரன் கோயில் மகாமண்டபத்தில் 2 அடி உயரமான ஒரு வெண்பளிங்குப் புத்தர் சிலை காணப்படுகிறது. இதுவே அன்றி இக்கோயில் காப்பறை யில் 90-க்கு மேற்பட்ட செப்புத் திருமேனிகள் பாதுகாக்கப் பட்டு வருகின்றன, அவற்றுள் இரண்டு கவின்மிக்க புத்தர் சிலைகளும் உள்ளன. இவற்றின் காலம் தெரிய வில்லை.

---

(81) கேரளத் தொல்லியல் துறை இயக்குநர் இக்கருத்தைக் கூறினர்.

# 3. பல்லவர் காலக் கோயில்கள்

(க) தேவாரக் கோயில்கள் : (1) திருச்செங்கோடு: அர்த்தநாரீச்சுவரன்: (2) அறப்பள்ளி: அறப்பள்ளி உடையார் (3) ஏழூர்: தேசீச்சுவரன் - (4) தோழூர்-ஈச்சுவரன்.

(உ) பிற கோயில்கள்—(1) சேலம்: கிளிவண்ணமுடையார்—(2) நாமக்கல்: அதியேந்திர விட்ணுகிரகம்.

முன் இயலில், சிற்பக் கலையின் தோற்றமும் வளர்ச்சியும்'—என்ற தலைப்பில் கற்காலம் தொடங்கி, சமண பௌத்த காலம், ஈருகச் சேலம் மாவட்டம் சிற்பக் கலையில் பெற்றுள்ள பங்கைத் தொகுத்துக் கூறினோம். இப்பகுதியில் பல்லவர்காலக் கோயில்கள் வரலாற்றைக் காண்போம்.

க. தேவாரக் கோயில்கள்: அப்பர், சம்பந்தர், சுந்தரர் எனனும் சைவ சமயக்குரவர்களால் பாடப்பெற்ற கோயில் பாடல் பெற்ற தலம் எனப்படும். மூவர் தேவாரப் பாடல்களில் பெயர்மட்டும் குறிக்கப் பெற்ற கோயிலை வைப்புத்தலம் என்பர்

சேலம் மாவட்டத்தில் திருச்செங்கோடு மட்டுமே சம்பந்தர் தேவாரப் பாடல் பெற்ற தலம். அப்பரின் வைப்புத் தலங்களாகத் திருச்செங்கோடு, ஏழூர், தோழூர், அறப்பள்ளி, ஆகிய நான்கு தலங்கள் குறிக்கப்படுகின்றன. சம்பந்தரால் மயிண்டீச்சுரம், அறப்பள்ளி ஆகிய இரண்டும்; சுந்தரரால் தகடூரும் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் மயிண்டீச்சுரம், தகடூர் இரண்டும் தற்போது தர்மபுரி மாவட்டத்தோடு இணைந்துவிட்டன.

1. திருச்செங்கோடு: அர்த்தநாரீச்சுவரன்... திருச்செங்கோடு என வழங்கப்படும் இத்தலம் சங்ககிரி புகைவண்டி நிலையத்தில் இருந்து தென்கிழக்கில் ஆறு கல் தொலைவில் அமைந்துள்ளது. சங்ககாலம் தொடங்கி இன்றுவரை பல அறிஞர்களைத் தமிழகத்திற்கு வழங்கிப் புகழ் பெற்றது இவ்வூர். இங்குள்ள மலையில் தான் உலகமுதல்வன் அர்த்தநாரீசன் மாதொருபாகனாய்ப் பாகப் பிரிவாளுடன் எழுந்தருளியுள்ளான்.

திருவள்ளுவ மாலை ஆசிரியர் செங்குன்றூர்க்கிழார். உரிச்சொல் நிகண்டில் ஆசிரியர் காங்கேயர், கபிலதேவர், திருச்செங்கோட்டுப் புராண ஆசிரியர், கவிராய பண்டிதர். முத்துசாமிக் கோனார், முதலியோர் வாழ்ந்து சிறப்புப் பெற்றது இவ்வூர். கம்பர் காலத்தில் இவ்வூரில் கொங்குப் புலவர் சபை இருந்ததெனக் கொங்குமண்டலச் சதகம் குறிக்கிறது.[1] அர்த்தநாரீச்சுவரன் எழுந்தருளியுள்ள இம்மலை நாகமலை, இடப மலை, துர்க்கைமலை எனப் பல பெயர்களால் வழங்கப்படுகின்றது. இம்மலையில் முருகன் கோயில், விட்ணுகோயில், சிவன் கோயில், பிள்ளையார் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. இங்ஙனம் சிவ பெருமானின் குடும்பமே இவ்வாயிரம் அடி உயரமலையில் கொலுவிருக்கிறது.

புராணங்கள் தனது மைந்தன் முருகன் கோயிலின் அருகே இம்மலையில் பார்வதி இறைவனோடு ஒரு பாகமாக இணையத் தவம் இருந்ததாகவும் நோன்பின் முடிவில் இறைவன் தம் வடிவை மாதொருபாகனாய் அமைத்துக் கொண்டதாகவும் கூறுகின்றன. மூலத்தானத்தில் இலிங்க மில்லாமல், அர்த்தநாரீச்சுவர உருவம் ஆறடி உயரத்தில்

(1) 'கொங்குமண்டலச் சதகம்', - முத்துசாமிக் கோனார் வெளியீடு. 1929. செய். 36.

தந்த நிறத்தில் காட்சி தருகிறது. கண்ணகி கோயில் இதுவே என்று கருதிப் புலவர்கள் ஆண்டுதோறும் இங்குக் கண்ணகி விழா எடுக்கின்றனர். ஒரு முலை இழந்தாளோர் திருமா பத்தினி, கண்ணகியின் சிலையே பின்னர் அர்த்தநாரீச்சனாக விளங்குகிறது என்பது ஆய்வாளர் கருத்து.[2] அர்த்தநாரீசர் சந்நிதி மேற்கு நோக்கியும், செங்கோட்டு வேலர் சந்நிதி கிழக்கு நோக்கியும் உள்ளன. இம்மலையில் எழுந்தருளியுள்ள விட்ணுவுக்கு ஆதிகேசவப் பெருமான் என்று பெயர்.

மலை உச்சியில் பிள்ளையார் கோயில் காணப்படுகிறது. வரடிக்கல் என்பது இக்குன்றின் பெயர். இப்பிள்ளையார் கோயிலைச் சுற்றியுள்ள குறுகலான பாதையை வலம் வருவோர்க்குப் பிள்ளைப்பேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை. 'கண்ணுக்குள் ஒற்றிக்கொள்ளப் பிள்ளையை நச்சிச் சுற்றும் மலடிகல்' எனக் கொங்குமண்டலச் சதகம் கூறுகிறது.

பாடல் பெற்ற தலம்: இங்கெழுந்தருளியுள்ள மாதொரு பாகனைச் சம்பந்தர், 'வெண்ணீறு அணிந்து—' எனத் தொடங்கி, அந்தணன், தலைமகன், நீலநன் மாமிடறன், செஞ்சடையன், சேடன், தத்துவன் எனப் பலவாறு புகழ்ந்து பாடியிருத்தல் காணலாம். சம்பந்தர் தம் பரிசனங்களில் ஒரு பகுதியை இங்கு இருக்கவைத்துச் சில பரிசனங்களுடன் மேற்கொங்கில் உள்ள பவாநி, பேரூர், முதலிய தலங்களைத் தரிசித்து மீண்டார். அப்போது இவ்வூரில் நளிர்சுரம் பரவி வருத்தம் செய்தது.

---

(2) கொங்கு. நவ. 71. P. 260. [கண்ணகி இடமுலை இல்லாதவள் என்பதும்; (சிலம்: 21·43·45); அர்த்தநாரீசனுக்கு இடதுமுலை உண்டு என்பது தேற்றம். எனின் இவர்தம் கருத்து வலிவுடைத்தன்று என்க.]

அது தீர்தற்பொருட்டு 'அவ்வினைக்கு இவ்வினையாம் ' என்ற திருநீலகண்டத் திருப்பதிகத்தைப் பாடி 'தீவினை தீண்டப்பெருத்திரு நீலகண்டம்' என்று ஆணையிட்டருளினார். அதனால் இந்நாடு முழுவதும் பிணிதீர்ந்து இன்புற்றனர். இன்றும், நோய் நடுக்குற்றோர் இப்பதிகம்பாடிச் சுரம் போக்கி வாழ்தல் கண்கூடு. அப்பர், 'கொடுங் கோளூர் அஞ்சைக் களஞ்செங்குன்றூர்' - எனப் பாடியுள்ளார். சம்பந்தருக்கு முன் வாழ்ந்த கபிலதேவர், இச் செங்கோட்டிறைவன் மீது அந்தாதியொன்று பாடியுள்ளார். அது பதினொராந் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இத்தலப் பெருமையை விளக்கும் திருச்செங் கோட்டுப் புராணம் ஒன்று உள்ளது.

*முருகன்:* இங் செழுந்தருளியுள்ள முருகன் சங்க காலம தொட்டு வழிபாடு செய்யப்பட்டு வருகிறான். அறு படை வீடுகளுள் ஒன்றான ஏரகம் இதுவே என்பது புலவர் வே. ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர் அவர்களின் கருத்தாகும். 'வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்' எனக் கலித் தொகை கூறும். (கலி 27: 16) இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் இம் முருகனைப் புகழ்ந்து கூறுவார்.[3]

கண்ணகி கணவனை இழந்து மதுரையை எரிவாய்ப்படுத்தித் தனியாகக் காடு மலை கடந்து வந்து நின்ற இடம் இத் திருச்செங்கோடு என்பதையும், (சிலம்பு: 23:189) கண்ணகி தம் தோழியரை நோக்கி, முருகன் உறையும் திருச்செங்கோட்டுக் குன்றில் நான் விளையாடுவேன் நீங்களும் வாருங்கள்

(3) செங்கோடு நெடுவேள் குன்று-என சிலம்பு குறித்ததற்கு திருச் செங்கோடு எனப் பொருள் கூறுவர், அரும்பதவுரைக்காரர். இவரே சிலம்பின் முதல் உரையாசிரியர் என்பதால் இக்கருத்தின் பழமையை உணரமுடியும்.

என்று கூறியதும், (சிலம்பு 29:11) சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது.[4] இம் முருகன்மீது அருணகிரிநாதர் பாடிய 26 திருப்புகழ் பாடல்கள் உள. இம்முருகன் புகழ் பாடும், திருச்செங்கோட்டுக் கலம்பகம் ஒன்று கி. பி. 1896-ல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.[5] இம் முருகன் பெருமையை விளக்கும் ஒரு பாடல் உண்டு. ஒருநாள் இங்கு வந்த வேற்றூர்ப் புலவர் ஒருவர், திருச்செங்கோடு நாக மலை எனில் அது படம் எடுத்து ஆடாததேன்? என்ற பொருளில், 'சமரமுகத் திருச்செங்கோடு சர்ப்ப சைல மெனில் அமரில் படம் விரித்தாடாதெதனை?' என்றார். அதைக்கேட்ட இடையன், 'அஃது ஆய்ந்திலையோ? நமரன் குறவள்ளிபங்கன் எழுகரை நாட்டுயர்ந்த குமரன் முருகன் தம் மயில்வாகனம் கொத்துமென்றே' என்று பதில் கூறினும்.

*கல்வெட்டுக்கள்:* இங்கிருந்து 37 கல்வெட்டுக்களை 1905-ஆம் ஆண்டு தொல்லியல் துறை படியெடுத்துள்ளது. அவற்றுள் முதல் பராந்தகன் கல் வெட்டுக்கள் ஆறும், முதல் இராசராசனின் கல்வெட்டுக் கள் ஐந்தும், இராசேந்திர சோழனின் கல்வெட்டுக்கள் ஆறும, சுந்தர பாண்டியன் கல்வெட்டுக்கள் மூன்றும் நாயக்கர் காலக் கல்வெட்டுக்கள் பதினெளறும், காணப் படுகின்றன. அவற்றால் அறியப்படுவன பெரும்பாலும் அந்தணர்களுக்கு அன்னதானமும், யாத்திரை செல் வோர்க்கு உணவும், கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிவந்த மும் பற்றியன ஆகும். ஒரு கல்வெட்டு, திருச்செங்கோடு, கொங்கு எனற வீரசோழ மண்டலக் கீழக்கரை பூந்துரை நாட்டில் உள்ளதென்று குறிக்கிறது. பல கல்வெட்டுக் களில் மோரூர், கிளிநல்லூர், அமண்குடி, அந்தியூர்

(4) *சிலம்பு* 30:54; 24:8.,

ஆண்டியூர், குன்றத்தூர், புகழியூர், போன்ற ஊர்ப் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. கி. பி. 16.64-ல் விசுவ நாத சொக்கலிங்க நாயக்கர் காசிவிசுவேசர் கோயிலையும், கோபுரத்தையும் கட்டியதாக ஒரு கல்வெட்டுக் குறிக் கிறது.

## 2. அறப்பள்ளி: அறப்பள்ளி உடையார்:

கொல்லிமலை சேலம் மாவட்டத்தில் நாமக்கல், ஆத்தூர் வட்டங்களில் அமைந்துள்ளது. இம்மலையின் சுற்றளவு 192 சதுரமைல். இம்மலையைச் சதுரகிரியென அறைப்பள்ளி ஈச்சுவர சதகம் கூறும். இதன் உயரம், 4663 அடியாகும். இம்மலையில் 300-க்கு மேற்பட்ட ஊர்கள் உள. இம் மலைநாடு 11 நாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. இவற்றுள் வாழவந்தி நாடு என்பதும் ஒன்று. இவ்வாழவந்தி நாட்டில்தான் புகழ்பெற்ற இவ் அறப்பள்ளி ஈச்சுவரன் கோயில் காணப்படுகிறது.

*வரலாறு:* வரலாற்றுப் புகழ்மிக்க இம்மலையைப் பல புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். ஓரி என்னும் சங்க கால வள்ளல் கொல்லிமலைப் பகுதியை ஆண்டான். (புறம்: 156) இவன் காலத்தில் இம்மலையில் கொல்லிப் பாவை இருந்ததை முன்னர்க் கண்டோம். (பக். 33) இம்மலையில் காரியுடன் நடந்தபோரில் ஓரி இறந்து படவே (அகம்: 209) இம்மலை நாடு சேரர் ஆட்சிக்குள் சில காலம் இருந்து வந்தது. பின் அதிகன் மரபிற்கு உட் பட்டு அவனுக்குக் கீழ் ஆட்சி புரிந்துவந்த மழவர் என்ற ஆணையாளர் வழிவழி ஆட்சி செய்தனர். பாண்டியன் மாறன் மழவர் கொங்கினை வென்றதாக வேள்விக்குடிச்

---

(5) சுந்தர முதலியார், 'திருச்செங்கோட்டுக் கலம்பகம்' 1896.

செப்பேடு கூறும் 7-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியை ஆண்டுவந்த கொல்லி மழவன் மகள் முயலக நோயாம் காக்கை வலிப்பைச் சம்பந்தர், 'துணிவளர் திங்கள் துளங்கி' என்ற பதிகம்பாடி நீக்கினார் என்பர்.

கொல்லிக் கண்ணனார் (குறு. 34)சேந்தங்கண்ணனார், சேந்தம் பூதனார், போன்ற சங்ககாலப் புலவர் இம்மலை நாட்டில் வாழ்ந்தவர்கள் எனக் கருதப்படுகிறது. இம்மலைப் பகுதியில் வாழ்ந்த கொங்குப் பிராட்டியாரின் வீட்டில்தான் இராமாநுசர் தங்கிச் சென்றதாகக் கூறுவர்.

கோயில் : இங்கு எழுந்தருளியுள்ள இறைவனைக் காண 15 மைல்கள் மலைப்பாதையைக் கடந்து செல்ல வேண்டும் சேந்தமங்கலத்திலிருந்து, சோலைக்கொல்லை வரை சுமார் 35 கிலோமீட்டர் தொலைவுக்கு வாகன வசதியுண்டு. செம்மேடு என்ற கிராமத்தில் இருந்து இக்கோயிலுக்குச் செல்லச் சற்றுத் தொலைவில் தனிப்பாதை பிரிகிறது. அங்கிருந்து 11 கிலோ மீட்டர் நடந்துசென்றால் கோயிலை அடையலாம் கோபுரம் இல்லா முன் வாயிலைக் கடந்து சென்றால் ஈச்சுவரன் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருப்பதைக் காணலாம். தென் பிரகாரத்தில் வடக்கு நோக்கிய வள்ளி தெய்வானையுடன் மயில்மீது ஆறுமுகரும் காட்சிதருகிறார். அவரை நோக்கியவாறு முன் மண்டபத்தில் தாயம்மாளின் சந்நிதியிருக்கிறது. இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனைக் கல்வெட்டுக்கள் திருவறப்பள்ளி ஆள்வார்.[6] திருவறப்பள்ளி மாதேவன்.[7] திருவறப்பள்ளி உடையார்.[8] ஆடவல்லான்.[9] என்றும் முருகனை இளையநாயனார் என்றும் தேவியை நாச்சியார் [10] என்றும் குறிக்கின்றன. இம்மாவட்டத்தார்

(6) 502, 505, 504 of 1929.
(7) 498 of 1929.
(8) 400 of 1929.
(9) 402 of 1929.
(10) 507 of 1929.

இறைவனைத் தர்மகோசீச்சுவரர் என்றும், அம்மையைத் தர்மசம்வர்த்தினி என்றும் அழைக்கின்றனர். விநாயகர், சண்டேசுரர், மூர்த்தி, முதலானோர்க்குத் தனிக் கோயில்கள் உள, தென் கோட்டத்தில் தட்சிணாமூர்த்தியும், வடக்குக் கோட்டத்தில் துர்க்கையும், காட்சிதருகிறார்கள். வடகோட்டத்தில் பிரும்மா இல்லை.

தலப்பெருமை : இங்கு ஆடி 17, 18, 19-ஆம் நாட்களில் நடைபெறும் திருவிழாவுக்குத் தமிழகத்தின் பல பகுதிகளில் இருந்தும் மக்கள் வருவர். இம்மலை மக்கள் இவ்விச்சுவரனைக் குலதெய்வமாகக் கொண்டாடுவர். இக்கோயிலின் தேர், சித்திர வேலைபாடுகள் மிக்கது இது கடந்த நூறு ஆண்டுகளாகப் பயன்படுத்தப்படவில்லை நரபலி கேட்டதால் இத்தேர் பயன்படுத்தப்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. என்று அப்பகுதி மக்கள் கூறுகின்றனர். இத்தலம் தேவார வைப்புத் தலங்களுள் ஒன்றாக வைத்தெண்ணப்படுகின்றது. திருநாவுக்கரசர், அடைவுத் திருத்தாண்டகத்து முதற்பாவில்,

*"பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன்றெய்து*
*புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்*
*கரப்பள்ளி திருக்காட்டுப்பள்ளி கள்ளார்*
*தமிழக் கொல்லி அறப்பள்ளி."* – என்று

போற்றுவார்.

சம்பந்தர் தம் தேவாரப் பதிகத்தில் *'கொல்லிகுளிர் அறப்பள்ளி'* எனப் புகழ்கிறார். இவ்விறைவன் அப்பரால் புகழப்படுதலான் கி. பி. 590-க்கு முன் இக்கோயில் இருந்தது என்பது தேற்றம். இவ்விறைவன் மீது சிவன்மலைப் புராணம் எழுதிய அம்பலவாணக் கவிராயர் இயற்றிய அறப்பள்ளீசுர சதகம் ஒன்றுண்டு. இக்கோயிலிலுள்ள

முருகன்மீது அருணகிரிநாதர் பாடிய மூன்று திருப்புகழ்ப் பாடல்கள் உள.

அவை முருகனைக், 'கொல்லி முதல்தானென்று மெல்லியிருபேதங்கள்— கொல்லிமலைமேல் நின்ற பெருமாளே!' என்றும், 'வல்லிமட்ட— கொல்லிமலை நாடா' என்றும் புகழ்கின்றன. கோயிலுக்கு நேர் கிழக்கே அரை கல் கீழே சென்றால் 150 அடி உயரத்தி லிருந்து ஓர் அருவி விழுவதைக் காணலாம். தமிழகத்தில் மிக உயரமான நீர்வீழ்ச்சி இதுவே கோயிலை அடுத்துள்ள ஐயாற்று நீர் நிலையில் பலவகை மீன்கள் வளர்ந்து வரு கின்றன. அறப்பள்ளிநாதர் மீன் வடிவாக இலங்குவ தாகக் கருதப்படுகிறது. ஒருவர் தாம் கருதிய செயல் முடித்தால், மீனுக்குத் தங்க, வெள்ளி மூக்குத்திகள் அணிந்துவிடுவர். இப்பழக்கம் இன்றும் உண்டு. இறை வனை வழிபடச் செல்லும் மக்கள், சோறு, பழம், தேங்காய் முதலியவற்றை இவ்வாற்றில் இட்டபிறகே வழிபாடு தொடங்குவர். இங்கே துள்ளித் திரியும் மீன்கள் வியக்கத் தக்க பழக்கம் உடையனவாக விளங்குகின்றன. 'ஒருவர் தம் கையில் உள்ள உணவுக்கொடுக்கும் முன் போட்டி யிட்டுப் பறித்துச் செல்கின்றன,' என்று கெமிங்வே (Hemingway) கூறியுள்ளார்.[11] லீ பெனு (Le-fanu) என்பார், தினமும் மாலை நேரத்தில் மணி அடித்து மீன் களை உணவிற்கு அழைக்கின்றனர்' என்பார்.[12] கொங்கு மண்டலச் சதகம், இம்மீன்களைப் பற்றியதோர் சுவை யான வரலாற்றைக் கூறுகிறது இக்கோயிலைக் கொள்ளையிடவந்த மூகமதியர் இவ் வாலாற்றில் உரைமீன்களைப் பிடித்துச் சமைத்தனர். இத்தலத்து

---

(11) Hemingway, 'Trichinopolly' P. 4.

(12) Le-fanu-H, 'Salem District Manual.

அம்பிகை அறச்சாலை வல்லி என்னும் தாயம்மையின் கடைக்கண் பார்வை அம்மீன்களின்பாற் செல்லச் சமைத்த மீன்கள் துள்ளிக் குதித்து ஆற்றில் மறைந்தன என்பதை,

*'அச்சுதன் கொங்கிலறப்பள்ளி நாதரையாற்றிலுறை*
*பச்சை நல் மீனைப் பிடித்தறுத் தாக்கப்பசுந்துருக்கர்*
*கச்சணி கொங்கை யறச்சாலை வல்லிகயல் குதித்த*
*மச்சமுள் துள்ளி விளையாடு கொங்கு மண்டலமே!'*

எனக் கூறும்.

*கல்வெட்டுக்கள் :* இக்கோயிலில் 19 கல்வெட்டுக்கள் உள்ளன *சோழர் காலம்: 12. நாயக்கர் காலம். 1. பொது: 6.*

*உத்தமசோழன்:* (கி. பி. 970-985): இவனுடைய 16-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உத்தமசோழ தேவனின் தாய் *பராந்தகன் மாதேவடிகள் செம்பியன் மாதேவியார்* நூறு கழஞ்சுப்பொன் கொடுக்க அதன் வட்டியைத் திருவறப்பள்ளி ஆள்வார்க்கு மாதசங்கராந்தி முழுக்கிற்கு இந்நாட்டார், கோயில் சபையாரிடம் கொடுப்பதாக ஒப்புக்கொடுத்த செய்தியைக் கூறுகிறது.[13] கண்டராதித்த சோழனின் தேவியார் செம்பியன் மாதேவியார் எல்லையற்ற சிவபக்தி கொண்டவர். இவர் மழநாட்டுச் சிற்றரசன் மகள் என்பதைக் கல்வெட்டு கூறும்.[14] இவர் கண்டராதித்தன் அரிஞ்சயன், சுந்தரசோழன், உத்தமசோழன், இராசராசசோழன் ஆகிய ஐந்து அரசர்கள் காலத்திலும் வாழ்ந்தவர். இவர்களுள் பரகேசரிவர்மன்

---

(13) 503 of 1929. (14) S.I.I. Vol. III No. 141.

எனப் பெயர்சூடி ஆண்டவர் அரிஞ்சயன், உத்தமசோழன், ஆகிய இருவர். இக்கல்வெட்டுக் கூறும் கோப்பரகேசரி உத்தமசோழனாக இருக்கவேண்டும். அரிஞ்சயன் ஈராண்டுகளும் (கி. பி. 956-957), உத்தமசோழன் (கி. பி 970 985) பதினைந்து ஆண்டுகளும் ஆண்டனர் என்று கருதப்படுவதால்.[15] இக்கல்வெட்டு உத்தமச்சோழனின் கல்வெட்டாக இருத்தல் வேண்டும். இக்கல்வெட்டு, அரசனின் 16 வது ஆட்சியாண்டைக் குறிப்பதால், உத்தமசோழன் ஆட்சியாண்டு கி. பி. 986 வரை செல்வதைக் காணலாம்.

*இராசராச சோழன்:* (கி. பி. 985–1014): இராசராச சோழனின் 11-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 996), *மலையமான் செட்டி அமுதன் அறவணன்* என்பவர் இக்கோயில் விளக்கு எரிக்கத் தங்கக் காசுகள் வழங்கிய செய்தியைக் கூறுகிறது.[16] 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 997) மூன்று கிராமங்களில் இருந்து கிடைத்த நில வருவாயைத் திருஅறப்பள்ளி உடையார்க்குக் கொடுத்த செய்தியைக் கூறும்.[17]

*முதல் இராசேந்திர சோழன்:* (கி. பி. 1012-1044): இவன் ஆட்சிகாலத்துக் கல்வெட்டுக்கள் இரண்டு கிடைத்துள்ளன 11-ஆம் ஆட்சியாண்டு (கி. பி. 1023) கல்வெட்டு, இக்கோயில் தேவதைகளுக்கு முக்கால வழிபாட்டிற்காக மூன்று பணியாளர்களுக்கு வீரனூர் நிலத்து வருமானத்தைக் கொடுத்த செய்தியைக் கூறுகிறது.[18] 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1026)

---

(15) பண்டாரத்தார் கருத்து.

(16) 498, to 1929.

(17) 490, to 1929.

(18) 491, to 1929.

கொல்லிமலை நாட்டார்க்கு அணிமுரி நாடாள்வார் தேவியார் இக்கோயிலில் கார்த்திகை விளக்கு எரிக்கக்கொடுத்த பொன்னைப் பற்றியது.[19] முதல் இராசராச சோழன் காலக் கல்வெட்டு ஒன்று அணிமுரிநாடாள்வாரை, ஆமூர்க்கோட்டத்து அரையன் தில்லைக்கூத்தன் இராசராச அணிமுரிநாடாள்வான் எனக்கூறும்.[20] இவ் அறப்பள்ளி, கோயிலில் உள்ள கல்வெட்டு அணிமுரி நாடான்வாரின் மனைவியின் பெயர் கண்ணுளத்தடியார் என்றும், இவன் மலப்பெருமாளின் மருமகன் என்றும் கூறுகிறது.

*முதல்குலோத்துங்கன்:* (கி. பி. 1070-1120) இக் கோயில் தெற்குச் சுவரில் இவனுடைய 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி பி. 1082) இராசமகேந்திரன் (மும்முடிச்சோழன்) வயலூரில் உள்ள சில நிலங்களுக்கு வரிவாங்கும் உரிமையை வழங்கியிருந்தான். எனினும் சில ஆண்டுகளாக வரி வசூலிக்கப்படாமல் இருந்தது. குலோத்துங்க சோழதேவர் உடமையாக்கி வரிவாங்கும் உரிமையைக் கோயிலுக்கு ஒப்படைத்தான் எனக் கூறுகிறது.[21] இராசமகேந்திரன் மும்முடிச்சோழன் ஆவான். இவன் இரண்டாம் இராசேந்திரனின் தம்பியும், வீர இராசேந்திரனின் தமையனும் ஆவான்.[22] இவனை இரண்டாம் இராசேந்திரனின் மகன் எனக் கருதுவாரும் உளர். இராசமகேந்திரன் மெய்க்கீர்த்தி, 'திருமகள் விளங்க விரு நிலமடந்தையை ஒருகுடை நிழற் கீழினிதுறப் புணர்ந்து; தருமநெறி நிற்ப மனுநெறி நடாத்திய;

(19) 497, to 1929.
(20) S. I. I. Vol. XIII No. 191.
(21) 509, to 1929.
(22) S. I. I. Vol. V No. 489, and 647.

உடையார் ஸ்ரீ இராசமகேந்திரதேவன்,' எனக்கூறும்.[23] மேற்கண்ட கல்வெட்டு குலோத்துங்கனைக் குலோத்துங்க சோழதேவர் என்று குறிக்கிறது.

*இரண்டாம் இராசாதிராசசோழன் :* (கி. பி. 1163-1178) இவன் ஆட்சிக்காலக் கல்வெட்டுக்கள் நான்கு காணப்படுகின்றன. அழிந்த நிலையில் உள்ள ஒரு கல் வெட்டு, குற்றங்கநாட்டு மலையாளிகள், விற்றுந்தன் சேமந்தன் என்கிற பிள்ளை அகளங்க நாடாழ்வான் உடன் செய்துகொண்ட ஒப்பந்தம் பற்றியது.[24] இக்கல் வெட்டுக் குறிக்கும் அகளங்கநாடாழ்வான் இரண்டாம் இராசாதிராசன் காலத்து வாழ்ந்த ஒரு அரசியல் தலைவன். இதே கருத்தைக் கூறும் மற்றொரு கல்வெட்டு முடிவுபெறாது நிற்கிறது.[25] மற்றொரு கல்வெட்டு அகளங்கன் முன்னிலை யாகக் கூடலூர் நாட்டுப்பண்ணையூர் பெரியமேட்டான் பெருகளிற்றுப்பாடி நம்பி என்பான் நாச்சியாருக்குத் திரு வாதிரை திருநாள் முறையாக நடக்க, கொடுத்த நிலதானம் பற்றியது.[26] 10-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1173) அகளங்கநாடாழ்வாரைப் பற்றியும், இக் கொல்லிமலை நாட்டாரைப் பற்றியும் கூறுவது. இக்கல் வெட்டால், கொல்லிமலை நாடு வீரசோழ மண்டலத்தில் உள்ளதெனறும், அகளங்கநாடாழ்வார், பாண்டிகுல வள நாட்டில் உள்ள இடையாற்றூர் நாட்டுத் திருத்தலவாய்த் துறையைச் சோந்தவா் எனபதும் அறியககிடககிறது. மேற்கூறிய நான்கு கல்வெட்டுக்களும் அரசனை, இராசாதி ராசதேவர் என்று குறிக்கின்றன.

---

(23) T. V. S. 'History of the Later Cholas' P. 240.
(24) 499, to 1926.
(25) 501, to 1929.
(26) 446, to 1929.

நாயக்கர் கல்வெட்டுக்கள் : முதலாம் முத்து வீரப்ப நாயக்கன் (கி. பி. 1609-1623): இவனுடைய ஆட்சியாண்டில் [கி. பி. 1611] உலோக ராகுந்த வங்கி நாராயண இராமச்சந்திர நாயக்கர் மகன் இம்மடி இராமச்சந்திர நாயக்கர், நாச்சியார் கோயிலைப் புதுப் பிக்கக் குட்டமலை நாட்டிலுள்ள அசை கிராமத்தைக் கொடையாகக் கொடுத்த செய்தியைப் பற்றியது.[27] முத்துவீரப்ப நாயக்கன், முத்துகிருட்டின நாயக்கன் மகன். இவன் தம் தலைநகரை 1616 இல் மதுரையில் இருந்து திருச்சிக்கு மாற்றியவன். இவன் ஆட்சிக்கு வந்த மூன்றுமாண்டில் இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. இம்மாடி இராமச்சந்திர நாயக்கன் சேந்தமங்கலத்தைத் தலைகரமாகக் கொண்டு ஆட்சி செய்த ஒரு பாளையக்காரன் என இராபர்ட் நோபிலே கூறுவர்.

அரசன் பெயர் தெரியாக் கல்வெட்டுக்கள்:

இக்கோயில் வடக்குச் சுவரில் உள்ள ஒரு கல்வெட்டு, கருங்கையன், குடும்பத்தார், மற்றும் சிலர், கொடுத்த தானத்தைப் பற்றியது.[29] மற்றொன்று இக் கோயில் மேளம் கொட்டுவாருககுக் கோயில் சபையாரும் பருவூர் குடும்பத்தாரும் செய்து கொடுத்த வசதிகளைப்பற்றியது.[30] வீரனூர் வீரண்ண செட்டி அறப்பள்ளியுடையார் தின வழிபாடுக்கு மேளம் கொட்டுவாருக்குக் கொடுத்த கூலி யைப் பற்றி மேலும் ஒரு கல்வெட்டுக்குறிக்கிறது.[31]

இக்கோயில் வடக்குப்பிரகாரத்தில் உள்ள ஒருகலலில் கலி 4871: தை 27 [கி பி 1771-இல்] பரட்டாயி அம்மனுக்குக் கோயில் அமைக்கப்பட்ட செய்தியைக் கூறு கிறது இந்த ஆண்டு ஆவணி மாதம் திருமலைநாதன்.[32]

(27) 489, to 1929.
(28) S D G. P. 68
(29) 492, to 1929.
(30) 494, to 1929.
(31) 495, to 1929.
(32) 506. to 1929.

குடவாயில் சிரங்கதேவன், சுப்ரமணியர், நாச்சியார் கோயில் வழிபாட்டுக்குப் பூத்தேவையைப் பூர்த்தி செய்ய பூந்தோட்டம் அமைத்துக்கொள்ள நிலம் வழங்கிய செய்தியைக் கூறுகிறது.[33] மற்றொரு கல்வெட்டு [கி. பி. 1824] இல் துறையூர் தாசில் நரசிங்கராயன், தாயம்மாள் கோயிலுக்குத் தங்கக் கலசம் செய்து கும்பாபிசேகம் நடத்திய செய்தியைக் கூறுகிறது.[34]

*ஏழூர்-தேசீசுரர் :*

பண்டு கொங்கு நாட்டை இருபத்து நான்கு உள் நாடுகளாகப் பிரித்திருந்தனர். அவற்றுள் பூந்துறை நாடே முதலாவதாக வைத்து எண்ணப்பட்டது. இப்பூந்துறை நாட்டின் துணை நாடாக விளங்கியதே ஏழூர் நாடு. இதை ஏழுகரை நாடு என்றும் வழங்குவர். ஏழூர் நாட்டின் தலைநகராக விளங்கியதால் இவ்வூர் ஏழூர் என வழங்கப்பட்டது. இவ்வூர் நாமக்கல்லின் வடக்கில் 10 கல் தொலைவில் திருச்செங்கோடு - இராசீபுரம் சாலையில் உள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள இறைவனைத் தேசீசுரர் என்று அழைப்பர், இக்கோயில் தற்போது பாழடைந்து காணப்படுகிறது இத்தலம் தேவார வைப்புத்தலங்களில் ஒன்றாகும். அப்பர், ஆறும் திருமுறையில் 'இடும்பாவனம் எழுமூர் ஏழூர்-தோழூர்' எனக் குறிக்கிறார். இங்கெழுந்தருளியுள்ள முருகன் மீது அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல் ஒன்று உண்டு.

*தோழூர் : ஈச்சுவரன் :*

அப்பர், இடும்பாவனம் எழுமூர் ஏழூர், தோழூர்' எனக் குறிப்பதால், ஏழூரே அன்றித் தோழூர் என்ற ஒரு பகுதியும் குறிக்கப்படுகிறது.

(33) 507, of 1929.

(34) 508 of 1929.

இவ்வூர் சேலம் - நாமக்கல்லில் இருந்து மோகனூர் செல்லும் சாலையில் 8-ஆவது கல்லில் அமைந்துள்ளது. இங்குள்ள சிவன் கோயில் தற்போது பாழடைந்து காணப் படுகிறது இக்கோயில் அப்பரால் குறிக்கப்படுவதால், இக்கோயில் இன்றைக்கு 1300 ஆண்டுகளுக்கு முற்பட்ட தென்பது தேற்றம்.

இதுவரை 'தேவாரக் கோயில்கள்' என்ற தலைப் பில், திருச்செங்கோடு அறப்பள்ளி, ஏழூர், தோழூர், ஆகிய நான்கு பதிகளின் வரலாற்றைக் கூறினோம். இதன் தொடர்ச்சியாகப் பல்லவர்காலக் கோயில்கள் எனக் கருதப்படும், சேலம், நாமக்கல் கோயில்களின் வர லாற்றைப் 'பிற கோயில்கள்' என்ற தலைப்பின்கீழ் விளக்கலாம்.

## உ. பிற கோயில்கள் :

### (1) சேலம்: கிளிவண்ணமுடையார்:

சேலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை சுகவ னேச்சுவரன்.[35] கிளிவண்ணமுடைய நாயனார்.[36] கிளிவனக்கோயில் பெருமான அடிகள்[37] கிளிவண் ணத்தேவர்.[38] சேலத்து உடையார்[39] எனக் கல் வெட்டுக்கள் குறிக்கின்றன. நாகேஸ்வரன், பாவ நாகேச்சுவரன், சுகவனேசன், என்று புராணம் போற்று கிறது.[40]

*ஊர்ப்பெயர் :*

இவ்விறைவன் எழுந்தருளியுள்ள இவ்வூர், இராசிபுரநாட்டின் கீழ்நாடான சேல நாட்டில்

(35) S. I. I. Vol, IV No. 141.
(36) ARE. 48 of 1888.
(37) 43 of 1888.
(38) 42 of 1888.
(39) 51-A. of 1888.
(40) சேலம் தலபுராணம் - சொக்கலிங்கப் புலவர்.

உள்ளதெனக் கொங்குமண்டலச் சதகம் குறிக்கிறது. இவ்வூர் சவுந்தரராசப் பெருமாள் கோயில் கல்வெட்டு இவ்வூரை இராசராச சதுர்வேதிமங்கலம் எனக் குறிக்கிறது. இக்கோயில் புராணம், பாவநாசபுரம், பட்டீச்சுரம், சுகவனபுரம் எனப் பல பெயர்களில் குறிக்கிறது. எத்நாப்பூர் செப்பேடு இவ்வூரைச் சாலிய-சேரமண்டலம் என்று குறிக்கிறது.

சைவ மகாபுராணம் இவ்வூரைச் *'சாலா'* என்று குறிக்கிறது. இவ்வூர் மலைசூழ்ந்து விளங்குவதால் சைலம் என்றுப் பெயர் கொண்டு அதுவே பின் சேலம் ஆயிற்று எனபர். இவ்வூரில் உள்ள மலை சேரன், ஆண்டதால் சேர்வராயன் மலை ஆயிற்று; அதைப்போல், சேரலாம் என்பது சேலம் ஆயிற்று என்பாரும் உளர்.

*தலவரலாறு:* இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் பால், சொக்கலிங்கப் புலவர் பாவநாசத் தலபுராணம் ஒன்று பாடியுள்ளார். இத்தலத்தின் பெருமையைச் சமக்கிருத மகாசிவபுராணத்தில் சேத்ரவைபவகாண்டத்தில் *'சுகாரண்ய மகாத்மியம்'* என்ற பகுதி சிறப்பாக விளக்குகிறது. இங்கெழுந்தருளியுள்ள முருகன்மீது அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடலும், ஔவையார், இங்கெழுந்தருளியுள்ள வலம்புரி விநாயகர் மீது பாடிய தனிப்பாடல்களும் உள.

*கோயிலின் காலம்:* இக்கோயிலின் காலம்பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன இக்கோயிலைச் சங்ககாலத்ததெனக் கொண்டு கி.பி. 100-க்கும் 250-க்கும் இடையில் கட்டப்பட்டிருக்கலாம் என P N. *நம்பியார்*, K C. *நாராயண குருப்பு* கூறியுள்ளனர்.[41] இதற்கு

(41) Census of India, Vol. IX. Madras XI. D. P. 486.

இவர்கள், இத்தலத்தில் எழுந்தருளியுள்ள வலம்புரி விநாயகரைப் போற்றிப் பரவிய ஔவையார், மூவேந்தர், விருப்பத்திற்காகப் பனத்துண்டத்தை மரமாக்கிப் பனம் பழங்களை வரவழைத்துக்கொடுத்தார் என்ற செய்தியைத்

"திங்கள் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும் எனத்தொடங்கி 'பங்குககு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே' என்று முடியும் ஒரு அந்தாதிக் கலித்துறைப் பாடலைச் சான்றுகாட்டி இப்பாடல் பாடிய ஔவை சங்ககாலப் புலவர் என்று கூறி அமைவதே. இரிச்சர்டு (Richard) என்பார், இக்கோயிலில் உத்தமசோழன் கல்வெட்டுக்கள் கிடைப்பதால் 9-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம் என்பர்.[42] சிலர் சிவன் கட்டளைப்படி தக்கன் யாகத்தில் கலந்துகொண்ட பாவம் நீங்கத் தேவர்கள் காவிரிசூழ் கொங்குவள நாட்டில் பாவநாசத்திருத்தலத்தில் சிவனை வழிபட்ட காலம் கிருதயுகம் என்று புராணச் சான்றுகாட்டி இற்றைக்கு 40,000 ஆண்டுகளுக்கு முற்பட்டதென்பர். இலக்கியச் சான்றுகளைக் கொண்டு நோக்கின் 7; 8-ஆம நூற்றாண்டைச் சார்ந்த கோயிலாக இருக்கலாம் என்றும சுந்தரரின் தேவாரப் பாடல் பெற்ற ஒரு தலமாக இருக்கலாம் என்றும் எண்ணத் தோன்றுகிறது. சுந்தரர் ஏனைச் சைவப் பெரியோர்களுள் காலத்தால் பிற்பட்டவர் என்பதை வரலாற்றாசிரியர் கூறுவர். இவர் சேரமான் பெருமாளுடன் கொங்குநாடு முழுதும் சுற்றிச் சமயப் பணிகள் செய்தவர். சிவபெருமான் அனுப்பிய வெள்ளையானையின்மீது ஏறிக்கொண்டு சுந்தரரும் சேரமான் பெருமாளும் திருக்கைலை சென்றதாகப் பெரிய புராணம் கூறும் இவ்விருவரும்

(42) SDG. P. 249.

கைலாயம் செல்லும்போது, இத்தலத்தில் எழுந்தருளியுள்ள வலம்புரி விநாயகரை வழிபட்டுக்கொண்டிருந்த ஔவையாரையும் உடன் அழைத்தனர். ஔவையார் விரைவில் வழிபாட்டை முடித்துப்போக எண்ணியதை விநாயகர் அறிந்து அவர்கள் கைலாயம் செல்லும்முன் உன்னைக் கைலாயம் சேர்ப்பன் என்றுகூற ஔவையார் 'சீதக்களப' — என்னும் அகவலைப் பாடித் துதித்தனள். விநாயகரும் தம் துதிக்கையால் ஔவையைக் கைலாயத்திற்குக் கொண்டு சென்றனர். தனக்குமுன் ஔவையார் வந்திருப்பதைக்கண்டு சேரமான் பெருமாள் நாயனார் வினவியபோது ஔவையார் கூறியதாக ஒரு தனிப் பாடலும் உண்டு.[43] இதே செய்தியை இக்கோயில் தலபுராணம், "பிறைமதி சூடும் வெள்ளைப் பிள்ளையார் திருமுன் பேசி" என்ற செய்யுளால் குறிக்கிறது. மேலும் ஔவையார் தம் வளர்ப்பு மகள் திருமணத்திற்குச் சேரமான் பெருமாளை அழைத்த வரலாற்றைப் பல தனிப்பாடல்கள் தெளிவாக்குகின்றன. ஔவையார்-சுந்தரர் வரலாற்றைத் தொடர்புபடுத்தும் இத்தலத்தின்மீது சுந்தரர் பாடியிருக்கலாம் இவர் எழுதிக் கிடைக்காத 3500 பதிகங்களில் ஒன்றாக இத்தல பதிகமும் இருந்திருக்கக்கூடும்.

திருவெள்ளூர் புராணம், இந்திரசருக்கம் 39-ஆவது செய்யுள் திருவெள்ளூரில் இருந்து ஐங்காதத் தொலைவில் இச் சிவன் கோயில் உண்டென்பதையும் ஒத்து நோக்கின் இத்தலம் தேவாரப் பாடல் பெற்றிருக்கலாம் என எண்ண இடமுண்டு.

*கோயில் அமைப்பு :*

இக்கோயில், கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்

---

(43) "மதுரமொழி நல்லுமையாள் சிறுவன் மலரடி
முதிர நினைய வல்லார்க்கரிதே முகில்போல் முழங்கி
அதிர வருகின்ற யானையுந்தேரும் தன் பின்னேசென்றே
குதிரையும் காதங் கிழவியுங் காதங் குலமகனே!"

டபம், அந்தராதாளம், நிருத்த மண்டபம், என ஐந்து படிகளைக் கொண்டது. இக்கோயிலின் தென்பால் அறுபத்து மூவர் வீற்றிருக்கிருர்கள். அதையொட்டி சப்தகன்னியர் கற்றளி காணப்படுகிறது. சப்தகன்னியர் கற்றளி பிற்காலத்தது. முதல் பராந்தகன் காலத்திற்குப் பிறகே சப்தகன்னியர் கற்றளி அமைத்துக் கட்டப்பட்டது கோயிலின் தென்மேற்குப் பிரகாரத்தில் கிழக்குநோக்கிப் 'பேழைவயிறும், பெருங் பாரக்கோடும் கொண்ட வலம்புரி விநாயகர் அமர்ந்துள்ளார். கற்றளிநாதர்க்கொரு மகனாகத் திருவளர் சேலத்தமர்வோன், தனிமயிலேறித் திரிவோன் ஆகிய முருகன் காட்சிதருகிருன்.

மேற்கு மதில் சுவரையொட்டித் தென்பால் பஞ்ச பூத லிங்கங்களையும், வடபால், சரசுவதி, சசலட்சுமியும, காட்சிதருகின்றனர். கருவறையின் மேற்குக் கோட்டத்தில் 'வளம்பலர் மலர்மேலயன் மாலும் மொருவகையால் அளம் பட்டறி வொண்ணுவகை அழலாகிய அண்ணல் உளம்பட்டெழுதழல் தூண்,' அதன் நடுவே அமைந்த அண்ணுமலையாரும்; கானகத்து எருமைக் கருந்தலைமேல் நின்ருடியகாளி வடக்குத் தேவ கோட்டத்திலும் காணப்படுகின்றனர். 'நாரணன் திருமகன் நான்முகன் ஆரணக் கலைகளின் ஆதிகர்த்தா தட்சிணுமூர்த்தியைத் தெற்குக் கோட்டத்தில் காணலாம. வடபால் நோமுகத்தையொட்டி, 'எந்நிலையில் நின்ருலும், எக்கோலம் கொண்டாலும், மன்னிய சீர்ச்சங்கரன் தாள் மறவாமை பொருள் பெறும் சண்டேச்சுவரரைக் காணலாம். இக்கோயிலைச் சுற்றி அமைந்துள்ள முருகன, விநாயகர் கோபுரங்கள், மேற்குமுக மண்டபம், துர்க்கை மண்டபம் முதலியன 1947-க்குப் பிறகு கட்டப்பட்டவை. இக்கோயிலில் உள்ள கல்யாண மண்டபம் 1823-இல் சேலம் மாவட்டத் தண்டல்நாயகமாயிருந்த

டேவிஸ் என்பவரால் கட்டிக்கொடுக்கப்பட்டதாக சேலம் மாவட்டப் பதிவேடு குறிக்கிறது. நிருத்த மண்டபம், சுந்தர பாண்டியனின் 24-ஆம் ஆட்சியாண்டில் கட்டப் பட்டது. கருவறையும், அதையொட்டிய அர்த்தமண்டப முமே காலத்தால் முற்பட்டதாகத் தெரிகிறது. இக்கோயில் கருவறையில் பிற்காலச் சோழர் கலைப்பாணியைக் காண முடியாது.

*கல்வெட்டுக்கள் :*

இக்கோயிலில் இருந்து டாக்டர் உல்ஸ் என்பவரால் 1888-இல் 13 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் உத்தமசோழன் கல்வெட்டுக்கள் நான்கும். இராசராசசோழனின் கல்வெட்டுக்கள் மூன்றும்; வீர பாண்டித்தேவன் கல்வெட்டு ஒன்றும், சுந்தரபாண்டியன் காலக் கல்வெட்டுக்கள் ஐந்தும் காணப்படுகின்றன. கல் வெட்டுக்கள் கூறும் செய்தியை இனிக் காண்போம்.

*உத்தமசோழன் (கி. பி. 970-985):*

உத்தமசோழனின் 5-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு *வீரசோழ மிலாடு உடையான் நநாட்டான் சித்தவடவன் பெருந்தேவியார் கவிரநாச்சி சங்கரி* இக்கோயிலுக்கு நந்தா விளக்கு எரிக்க ஐங்கழஞ்சு பொன்கொடுத்த செய் தியைக் குறிக்கிறது[44] இக்கல்வெட்டுக் கூறும் சித்த வடத்தடிகள் உத்தமசோழனுக்குத் திறை செலுத்தி வாழ்ந்து வந்த ஒரு குறுநில மன்னன். இவன் தேவியே கவிரநாச்சியார். இவர் தமிழகத்தில் உள்ள பல கோயில் களுக்கு விளக்கெரிக்கப் பொன், *சாவாமூவாப்* பேராடுகள் ஆகியன வழங்கிய செய்தியைப் பல கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.[45] உத்தமசோழனின் இரண்டாம் ஆட்சி

(44) S. I. I. Vol. IV No. 141.

(45) E. In. Vol. VII P. 135., S. I. I. Vol. II P. 167.

யாண்டுக் கல்வெட்டில் ஒன்பதுவரிகள் சிதைந்துவிட்டன. எஞ்சிய பகுதி, முரிகுயவன் என்பான் இக்கோயில் தேவர்க்கு நந்தா விளக்கெரிக்க ஐங்கழஞ்சுப் பொன்னைக் கொடுத்தான் எனக் கூறும்.[46] ஆறும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 976) சாத்தப்பகையன் என்ற வணிகன் ஐங்கழஞ்சுப் பொன்னைக் கொடுத்த செய்தியைக் கூறும்.[47] மற்றொன்று பதுவச்சந்திரன் மணவாட்டி நட்டம்சோமீ என்பாள் பொலிசையூட்ட ஐங்கழஞ்சுப் பொன்னைக் கொடுத்தாள் எனக் குறிக்கிறது [48] இவள் ஒரு நாட்டிய மாதாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

*முதல் இராசராச சோழன்:*

கருப்பக்கிரகத்தின் நுழை வாயிலுக்கு வடபால் இராசராசனின் 5-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு,

*"ஸ்வஸ்திஸ்ரீ இயாண்டு*
*ஐஞ்சாவது வாடன் தெ*
*— யிரனுக்கு த்தேவி*
*யார் முரி அமுதனார் கிளி*
*வண்ண தேவர்க்கு நெ.*
*ா ந்தா விளக்கொன்*
*றுக்கு வைத்த பொன்னை*
*ங கழஞ்சு தேவி*
*யார்முரி அமுதனார்*
*தமக்கு வைத்த விளக்*
*கொன்று ஏகவீரன்*
*கொலக்கப் பாவைக்கு*
*வைத்த விளக்கொன்று*
*பன்மாயெரட்சை".*[49]

என முடிகிறது. இதன் மேற்பகுதில் இராசராசனின் தேவியார் உலோகமாதேவியாரைப் பற்றிய செய்தி இருந்து அழிந்துபட்டதென டாக்டர் உல்சு குறிக்கிறார். முரிஅமுதனார், இளங்கோன் அடிகள் என்ற குறுநில மன்

---

(46) S. I. I, Vol. IV No. 151.
(47) ,, 148.
(48) ,, 150.
(49) ,, 140.

னனின் தேவியார், இவர் திருச்செங்கோட்டுக் கோயிலுக்குப் பல கொடைகள் வழங்கி இருக்கிறார். இவரைக் கல்வெட்டுக்கள், *முரி அமுதனார், முரி காமக்கனார்.*[50] *காமக்கனார்*[51] என்றும், இளங்கோன் அடிகளை ஏககோ *வீரர் திவாக,* தேவர்[52] என்றும் குறிக்கின்றன. தன் கணவர் பெயரில் ஒரு விளக்கும், தன் பெயரில் ஒரு விளக்கும் எரிக்கப் பொன் வைத்தாள் என அறிகிறோம்.

இவனது மூன்றும் ஆட்சியாண்டுக் (கி.பி. 988) கல்வெட்டு கொடும்பாளூர் *மணிக்கிராமத்து மஞ்சமணிய மார்த்தாண்டன்,* 25 பிராமணர்களுக்கு ஓராண்டு அமுது படைக்க ஐங்கழஞ்சுப்பொன் வைத்த செய்தியைப் பற்றியது.[53] ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 990) இச்சிவன கோயில் திருவிழாவுக்காக 25 அந்தணர்களுக்கு மூன்று கறியும் அரைப்படி நெய்யும், தயிரும், ஒருகாயும், இலையும் குறையாமல் ஊட்டவும் செலவனடிகள் வைதத பொனனைப் பற்றியது.[54]

*சடையவர்மன் வீரபாண்டியத்தேவன் :*
*(கி. பி. 1252-1268):*

இவனுடைய 10-ஆம் ஆட்சியாண்டில (கி.பி. 1262): *முதலிகளில் கண்ணகனன வழுதிநாராயணன்* இக்கோயிலுக்காகச் சில திருப்பணிகள் செய்தான். இச்செய்தி இக்கோயிலின் முன் உள்ள ஒரு கல்லில் 52 வரிகளில் ஒரு நீண்ட கதைபோல் எழுதிவைக்கப்பட்டுள்ளது திருமதில், திருமடைவிளாகம், திரு எடுத்துக்கட்டு, திருக்குளம்,

(50) S. I. I. Vol. XIII No. 244
(51) .. No. 232.
(52) ,, No. 244.
(53) S. I. I. Vol IV No. 147
(54) S. I. I. Vol IV No. 149

இவைகளையும், மற்றும், சிவாலயத்தின் தென்பால் மடம் ஒன்றினையும் ஏற்படுத்தினான். இம்மடத்தில் திருமேனி ஒன்றையும் எழுந்தருளச் செய்தான். இவற்றைப் பராமரிக்கச் சேலம் மறவன் ஏரியில் குடிநீங்காத் தேவதானமாக 150 குழியும், பூதானமாக 200 குழியும், மானியமாக விட்டான். இம்மடத்தை வகுத்து மெழுகவும், திருவிளக்கிடவும், பொறுப்பேற்பேசர்களுக்கு இக்கல்வெட்டின்படி காணியாகக் கடவது என்று குறிக்கப்பட்டுள்ளது.[55]

*சடையவர்மன் சுந்தரபாண்டியன்:* (கி. பி. 1276-1293)

இவனது 24-ஆம் ஆட்சிக்காலத்தில் இக்கோயிலின் நிருத்த மண்டபப் பணித் தொடங்கி 26-ஆம் (கி,பி. 1302) ஆட்சியாண்டுவரை நடந்தது 30 கால்களை உடைய இந்நிருத்த மண்டபத்தின் கால்கள் பலரால் தானமாக வழங்கப்பட்டுள்ளன *மலையாளரில் தாவைக்குறிச்சி சாத்தன் திரையன்* ஒரு காலும்.[56] *காசியப்பன் நம்பி பிள்ளை* எடுத்த *கையழகியான் சுந்தர பிரம்மாதிராயன்* ஒரு காலும்.[57] வெள்ளான்வள்ளி *மருதமுடையான் சாத்தன் மானேந்திய கையன* ஒரு காலும்.[58] குளத்துடையான் *பூமன்நம்பி* ஒரு காலும்.[59] கொடுத்ததாக அவ்வத் தூண்களில் வெட்டப்பட்டுள்ளன. இக்கோயில் *சன்னல்* ஒன்றின் நிலைப்படியில் உள்ள கல்வெட்டு, இத்திருச்சாலகம் *கஞ்சமலைப்* பெரியபிள்ளை ஆழ்வார் மகன், *சிறுப்பெருமாள்* கொடுத்த தன்மம்.[60]

---

(55) S. I. I. Vol IV No. 152
(56) S. I. I. Vol IV No. 142
(57) S I. I. Vol IV No. 143
(58) S. I. I. Vol IV No. 144
(59) S. I. I. Vol IV No. 145
(60) சிவகளை. மு. சுப்பையா, 'கொங்குநாட்டுக் கோயில்கள்' பக்கம் 265

என்று குறிக்கும்.

2. நாமக்கல்: அதியேந்திர விட்ணுக்கிரகம்:

நாமக்கல், சேலம் மாவட்டத்தில் உள்ள ஒரு நகரம். இவ்வூர் நாமக்கல் வட்டத்தின் தலைநகராகச் சங்ககிரிக்குத் தென்கிழக்கே 27 கல் தொலைவில், சேலம்-திருச்சி நெடுஞ் சாலையில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு ஏழூர் நாட்டு திரு ஆரைக்கல் என்ற பெயர் பண்டைக் கல்வெட்டுக் களில் காணப்படுகிறது. இவ்வூர் ஏழூர் நாட்டில் வாள வந்தி நாட்டுக்கும் விமலை நாட்டுக்கும் எல்லையாக அமைந் ததெனக் கொங்குமண்டல உரையாசிரியர் குறிக்கிறார், எனினும் ஊர்த்தொகையில் சேர்க்கப்படவில்லை. இது ஏழூர் நாட்டு மலைக்கோட்டையூராதலின் ஊர்த் தொகை யுல் சேர்க்கப்படவில்லைபோலும்.

*ஊர்ப் பெயர்:*

இவ்வூர்ப் பெயரின் காரணம் பற்றிப் பல கருத்துக் கள் நிலவுகின்றன. அநுமனால் இராம காரியத்திற்காகச் செல்லும்போது, கொண்டுவரப்பட்ட மலையாதலின் இராம கிரி-நாமகிரி எனவாகி நாமக்கல் என மாறிற்று என்பர்[61] திரு. *ரா. பி.* சேதுப்பிள்ளை, ஆரைக்கல் என்பது, கோட்டை சூழ்ந்த மலை என்ற பொருள் கொண்டு நாமக் கல் எனத் திரிந்ததென்பார்.[62] இக்கோட்டை இராமச் *சந்திர நாயக்கர்* என்ற பாளையக்காரர் கட்டினார் என்றும், இலட்சுமி *நரசிம்ம நாயக்கரே* கட்டினார்.[62] என்றும் இரு

---

(61) ரா. பி. சேதுப்பிள்ளை, 'தமிழகம் ஊரும் பேரும்' PP. 5,27

(62) H. Lefanu, 'Salem District Mannual' P. 112

(63) இரா. நாகசாமி, 'நாமக்கல் குகைத்தளி' கொங்கு மே 1971 பக்கம் 1

வகைக் கருத்துக்கள் நிலவுகின்றன. எப்படி இருந்தாலும் கி.பி. 1730-க்குப் பிறகு இக்கோட்டை கட்டப்பட்டது என்பது தெளிவு. எனின் கோட்டையால் பெற்ற பெயர் என்பது வலிவுடைத்தன்று. திரு. இரா. நாகசாமி அவர்கள் ஆரை என்ற ஒருவகைக் கோரைப்புல் இப்பாறைமீது வளர்ந்திருக்கவேண்டும் எனவே திரு ஆரைக்கல் எனப் பெயர் பெற்று திருராயக்கல் எனவாகி, திரு என்ற அடை நீங்க ராமக்கல் - நாமக்கல் என வழங்கப்பட்டிருக்கலாம் என்பர்.[64]

*கோயில்:* இம்மலையின் மேற்குப் பக்கம், உள்ள குகைக் கோயில் (30'x14') நரசிம்ம சுவாமி எழுந்தருளியுள்ளார் வடக்குச் சுவரில் வைகுந்தநாதரின் நரசிம்ம அவதாரமும் தெற்குச் சுவரில் வாமன திருவிக்கரம அவதாரமும் உண்டு. நரசிம்ம மூர்த்தி இரணிய வதம் செய்த போது அஞ்சிய தேவர்கள் இலட்சுமியிடம் பகவானைச் சமாதானப் படுத்தும்படி வேண்ட அதன்படி மலையில் கமலாலயம் என்ற பொழிலின் கரையில் அன்னை, பெருமானைச் சௌம்யமூர்த்தியாகத் தரிசிக்கத் தவம் கிடந்த போது இறைவன தோற்றம் அளித்ததாகப் புராணம் கூறும். இத்தேவி *நாமகிரி* அம்மை என வழிபாடுசெய்யப் படுகிருள். கீழ்ப்பால் 18 அடி உயரமுள்ள ஆஞ்சநேயர், கோயிலை நோக்கியவாறு அமர்ந்திருக்கிறு இவ்வனுமனுக்கு விழா நாளில் 500 ரூபாயில் வடைமாலை சார்த்தப் படுகிறது. இவ்வாஞ்சநேயர் இராமபர்வதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு பறந்துவந்ததாகவும், அதை இங்கே வைத்ததாகவும் அதனுல் சாளக்கிராம சேத்திரம் எனப் பெயர் பெற்றதாகவும் புராணம் கூறும்.[65] இம்மலையின்

(64) 'நாமக்கலில் நயமிகுந்த சிற்பங்கள்' ஆனந்தவிகடன் 22—11—70

(65) 74 of 1906

பாதிவழியில் வடபால்அனந்தாச்சாரி விட்ணுகுகையுண்டு. இக்குகையில் வாமன அவதாரம், கேவல நரசிம்மன். விக்கிரம அவதாரம், சங்கர நரசிம்ம அவதாரம், முதலிய சிற்பங்கள் கவின்மிக்க வேலைப்பாடுடையன. இங்கு இறைவன் கார்க்கோடகன் பேரில் தெற்கில் தலையும் வடக்கே காலுமாக நீட்டிப் படுத்திருக்கிறார்.

இவ்விரு குகைக் கோயில்களும் அதியகுலத் தோன்றல் குணசீலன் என்று பட்டம் சூடி ஆண்ட, ஒருவனால் கட்டப்பட்டவையெனத் தெரிகிறது. கொங்குமண்டலச் சதகம், இக்குகைக் கோயிலைக் கட்டியவன் அதிகன் என்பதைப்

*"புதியதாய் மலையைக் குடைந்து நற்சிற்பப் புலவரைக்கொண்டு*
*அதியேந்திர விட்ணுக் கிரகமென்றேத் தவமைந்தவனும்*
*மதியுகியான வதிகனும் வாழ்கொங்கு மண்டலமே"*

எனக் கூறுவதால் அறிகிறோம். இக்குகைகளில் சமக்கிருதச் செய்யுட்களால் ஆன நான்கு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. ஒரு கல்வெட்டு, அதியகுலத்தைச் சேர்ந்த குணசீலன் அரியநாத விட்ணுக்கிருகம் என்ற இக்கோயிலை விட்ணு கோயிலாகச் செய்வித்தான் என்று குறிக்கிறது.[66] மற்றொன்று புகழ் வாய்ந்தவர்களின் மகள் வழிவந்த குலத்தவனும், அதியேந்திரர்களில் முதன்மையானவனும் ஆன சோமன் எனக் குறிக்கிறது.[67] மூன்றாவது கல்வெட்டு, 'அதியர்குலத்தில் சிறந்தவனும் நற்செய்கை யுடையவனுமாகிய அதியேந்திரனால் இவ் விட்ணுகிருகம் கட்டப்பட்டது' என்று கூறும்.[68] இக் கல்

(66) 75 of 1906.
(67) 76 of 1906.
(68) இரா. நாகசாமி, 'மலைச்செல்வங்கள்' தினமணி 5-11-1967.

வெட்டுக்கள் குறிக்கும் குணசீலன், பல்லவன் மகள் வழியைச் சார்ந்தவனாக இருக்கவேண்டும் என்றும்; இவனது அன்னை பல்லவ இராசசிம்மனுடன் பிறந்த தேவியாக இருக்கலாம் என்றும்; கருதப்படுகிறார்கள்[69] இதற்கு அவர்கள் காட்டும் சான்று: (1) இக்கோயில் கல்வெட்டுக்கள் குறிப்பிடும் பட்டப் பெயர்கள் இராசசிம்மனின் பட்டப் பெயர்களோடு ஒத்திருக்கின்றன என்றும்; (2) எழுத்துக்கள் பல்லவ கிரந்தத்தில் காணப்படுகின்றன என்றும் (3) இவ்வதிகனின் கல்வெட்டுக்கள் இராசசிம்மனின் கல்வெட்டுக்களை ஒத்திருக்கின்றன என்றும்; ஆய்வாளர் கருதுவதால், இக்கோயில் கட்டிய அதியன், பல்லவ இராசசிம்மனின் மைத்துனனாக இருக்கலாம் என்பர். இவர்கள் கருத்துக்களைக் கொண்டு நோக்கின், இக் குகைகள், ஏறக்குறைய கி.பி. 775-க்கும் 800-க்கும் இடைப்பட்ட காலத்தில் குடையப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

*கல்வெட்டுக்கள் :*

நாமக்கல்லில் இருந்து பத்துக் கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன.[70] மேலும் இங்கிருந்துதான் வீர சோழனின் செப்பேடுகள் (உதயேந்திர வீரசோழன் செப்பேடு) இரண்டும்[71] வெங்கையாவினால் பதிப்பிக்கப் பட்ட சேர அரசன் வீரசோழனின் ஒரு செப்பேடும் கிடைத்துள்ளன.[71]

*மூன்றும் இராசராசசோழன் :*

அரங்கநாதர் கோயில் கல்வெட்டு திரிபுனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராசராசதேவனின் 13ம் ஆட்சியாண்டில்

---

(69) 5 to 14 of 1906.
(70) Antq. Vol, IX P P. 47-50.
(71) Ep. Rep. of 1906. 74-75.

(கி. பி. 1229) வேதநாயகப் பெருமாளுக்குச் சிலை அமைத்த செய்தியைக் குறிக்கிறது. இவனே ஆறகழூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வாணகோ வரையனின் மகள் புவனமுழுதுடையாளைப் பட்டத்தரசியாகக் கொண்டவன்.

*சுந்தரபாண்டியன் :* (1216-1238):

இவனது இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டைக் (கி. பி. 1218) கோட்டையில் உள்ள அழிந்துபட்ட கோயிலின் தென் சுவரில் காணலாம். இது ஏழூர் நாட்டைச் சேர்ந்த ஒருவன் செய்த நிலத்தானம் பற்றிக் குறிக்கிறது. இக்கல்வெட்டு இக்கோயிலை *'அருளான் விண்ணகர்'* எனக் குறிப்பிடுகிறது

எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி, 1224) வட கொங்கில் ஏழூர் நாட்டில் உள்ள *வானவன் மாதேவி* என்ற கிராமத்தை வைத்தியப் புரந்தரன் ஆதித்ததேவன் திருவம்பலப்பெருமாள் என்னும் மருத்துவனுக்குக் கொடுத்த செய்தியைப் பற்றியது. இதே பாறையில் சுந்தரபாண்டியனின் 5-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு' (கி.பி. 1221) ஏழூர் நாட்டுச் சபையார், நகரத்தார்க்கு அரசனின் ஆணையை ஒப்பித்தல்பற்றியது நரசிம்மப் பெருமாள் கோயிலின் நுழைவாயிலின் கீழ் உள்ள நிலவரையில் 13-ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டு ஒன்று விடுகாதன் வட்டராயன் என்பவனைப்பற்றிப் பேசுகிறது இக்கல்வெட்டு முழுநிலையில் கிடைக்கவில்லை. ஏனைச் சமக்கிருதச் செய்யுட்களாக அமைந்த நான்கு கல்வெட்டுக்களைப்பற்றி முன்னர் விளக்கினேம். இனி அடுத்த இயலில் சோழர்காலக் கோயில்கள் பற்றி விளக்கலாம்.






# 4. சோழர்காலக் கோயில்கள்..

[பொது அமைப்பு—1. பேளூர்: தான்தோன்றிநாதன்—2. மோகனூர்: அசலதீபேசுவரன்—3, ஆத்தூர்: காயநிர்மலேச்சுவரன்—4. நன்செய் இடையாறு: திருவெள்ளிச்சுரன் — 5. உத்தமசோழபுரம் : கரபுரநாதர் —6. ஆறகழூர்: காமநாதர்—7. தெடாவூர்: ஏகாம்பர நாதர்—8. நைஞமலை: வரதராசப்பெருமாள்:]

**பொது அமைப்பு :**

சோழர்காலக் கோயில் வரலாற்றில் பெரும்பங்கு வகிப்பவை சிவன் கோயில்களே. ஏனை மாவட்டங்களில் உள்ள சிவன் கோயில்களைப்போல் இங்குப் பிரகார அமைப்பைக் காணமுடியாது. பெரும்பாலும் எல்லாக் கோயில்களும் (1) மகாமண்டபம், (2) அர்த்தமண்டபம் (3) கர்ப்பகிரகம் கொண்டவை. கருவறையில் சிவலிங்கம் விளங்கும் கோயிலைச்சுற்றி உயரமாக மதில் கட்டப்பட் பட்டிருக்கும். கருவறைக்கு வடபால் கோமுகம் உண்டு. பெரும்பான்மையான சோழர்காலக் கோயில்கள் கிழக்கு நோக்கியே அமைக்கப்பட்டுள்ளன. தாரமங்கலம், இராசீ புரம் கோயில்கள் மேற்கு நோக்கி உள்ளன. இம்மாவட் டத்தில் சிவன்கோயில்கள் 60-க்கு மேற்பட்ட பெயர்களால் வழங்கப்படுகின்றன. சோழர்காலக் கோயில்களுள்,

ஆறகழூர், மல்லசமுத்திரம், கடகத்தூர் ஆகிய ஊர்களில் எழுந்தருளியுள்ள இறைவனைச் சோழீச்சுவரன் என்ற பெயராலும் வழங்குவர். சோழர்காலச் சிவன் கோயில களில் பார்வதிக்கும் கோயில் உண்டு. இப்பார்வதியின் கோயில் பெரும்பாலும் மதிலையொட்டி வடகிழக்கு மூலையில் தென்முகம் நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. (சேலம், தெடாவூர்.) சில ஊர்களில் மதிலை ஒட்டி வடமேற்கு மூலை யில் கிழக்கு முகம் நோக்கி அமைக்கப்பட்டுள்ளது (பேளூர், ஆறகழூர்).

## 1. பேளூர் : தான்தோன்றி நாதன் :

பேளூர் சேலம் மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர் இவ்வூர் வாழப்பாடிக்கு வடக்கே 4 கல் தொலைவில் வசிட்டா நதிக்கரையில் அமைந்துள்ளது. இவ்வூர்த் தல புராணம் இவ்வூரைத் திருவெள்ளூர் எனக் குறிக்கிறது. தற்போது இவ்வூரை. பேளூர் என்றும், வேலூர் என்றும் வழங்குவர். இவ்வூரில் இருந்து மைசூர் மகாராசா காலத்துச் செப்புப் பட்டயங்கள் பல கிடைத்துள்ளன. இதைப் பற்றிய விளக்கங்களை *லீ-பெனு* (Le Fanu) சேலம் மாவட்டப் பதிவேட்டில் தந்துள்ளார்[1] ஏழுகரை நாட்டின் துணை நாடான குன்னத்தூர் நாட்டின் தலைநகர் பேளூர் என்பதை இச் செப்புப்பட்டயங்கள் கூறும்.[2] இவ்வூரின் மேற்பால் வெள்ளாற்றின் கரையில் ஒரு பாழடைந்த சிவன் கோயில் காணப்படுகிறது. இத்தலத்தில் எழுந் தருளிய இறைவன் தான்தோன்றிநாதன் என்றும் இறைவி அறம்வளர்த்ததாயார் என்றும் அழைக்கப் படுவர். இத்தலத்திற்கு *மகபுரி* என்ற பெயரும் உண்டு. இவ்விறைவன் உலக உயிர்கள் உய்யத் தானே தோன்றி

(1) Le-fanu. 'Salem District Mannual' P. 88.
(2) SDG. Vol. I Part. II P. 297.

விளங்கியதால் தான்தோன்றிப் பெருமான் என்றும் இந்த இலிங்கம் எவரால் எக்காலத்தில் நடப்பட்டதுஎன்பதற்குச் சான்றுகள் இன்மையால், 'அனாதி' என்றும் அழைக்கப்படுகிறது. இலிங்கம் இயற்கையாகவும் சிற்பியின் கைபடாத ஒரு தூண் போன்று காட்சிதருகிறது. இவ்வாறு தாமாகவே அமைந்ததை சுயம்புலிங்கம் என்பர். கை புனைந்தியற்ருக் கவினுடைய இவற்றைத் தான்தோன்றி என அழைப்பது பழந்தமிழர் வழக்கம். இவற்றில் சிவன் உறைவதால் மூலத்தை ஆராயாது வழிபட வேண்டும் என்று சிற்ப இரத்தினம் (2: 131-132) கூறுகிறது.

*தல புராணம்:*

இத்தல வரலாறு திருவெள்ளூர்ப் புராணம் என்னும் பெயரில் S. M *நாராயண பிள்ளை* அவர்களால் 11-9-1927-இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.[3] இதன் ஆசிரியர், பாவநாசத் தலபுராணம் பாடிய *சொக்கலிங்கப் புலவரே!*, இவ்வரலாற்று நூலை *'வடமொழிக் கடலிலுற முகந்து தென்மொழியாலுரைக்க லுற்றேன்'* எனப் பாயிரம் 29-ஆம் செய்யுளில் குறிப்பிடுகிருர். இவர் தொண்டை நாட்டவர் என்றும், கூடல்கிழார் மரபைச் சார்ந்தவர் என்றும், பாயிரச் செய்யுள் குறிக்கிறது.

*கோயிலின் காலம்:*

இத்தல புராணம், அர்ச்சுனன் இவ்வெள்ளாற்றங் கரையில் சிவபூசை செய்தான். (நதி: சரு. 10, 11, 12) எனக் குறிப்பதால், அர்ச்சுனனின் தீர்த்த யாத்திரை இற்றைக்கு 5140 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்தது என்பதைக் காசிவிசுவேசுர சதகத்தைச் சான்றுகாட்டி கி.மு. 3168-க்கு முன் இக்கோயில் கட்டப்பட்டிருக்கலாம்

---

(3) S. M. நாராயணசாமி பிள்ளை பதிப்பு, 'திருவெள்ளூர்ப் புராணம்' சேலம், 1927.

எனக் கணிப்பர்.[4] இத்தல புராணம் இற்றைக்கு 840 ஆண்டுகட்குமுன் எழுதப்பட்டது என்று கூறப்படுதலான்.[5] இக்கோயில் கி. பி. 840-க்கு முன்பே இருந்ததென்பதும், இக்கோயிலில் முதல் பராந்தகன் காலக் கல்வெட்டுக்கள் காணப்படுதலான் கி. பி. 907-க்கு முன்னரே இக்கோயில் இருந்ததென்பதும், வெள்ளிடைமலையாம். இக்கோயிலில் உள்ள உற்சவ மூர்த்தியில் கி. பி. 4011 எனக் குறிக்கப் பட்டிருப்பதால், கி. பி. 910-க்கு முன்பட்டதென்பதும் தெளிவு.

சைவ நாயன்மாராகிய கணம்புல்லர் இவ்வூரைச் சேர்ந்தவர் என்று வரலாற்றுசிரியர் கருதுவர். தல புராணம், இவ்வூர் வடவெள்ளாற்றின் தென்கரையில் இருப்பதால் வெள்ளூர் என்று வந்ததென்றும்; முனிவரது யாகத்தினுல் வேள்வியூராயிற்று என்றும் தலபுராணம கூறுகிறது. மேலும் இவ்வூரைச் 'செந்தேன் பொங்கர் செறிவெள்ளூர்' என்றும் இவ்வூரைச் சுற்றித் தேனி றைந்த சோலைகளும் மந்தமாருதமும் தோப்புகளும், கண் கவர் வனமாகக் காட்சிதருகின்றதென்றும் பல பாடல்கள் விளக்குகின்றன. தற்போது இச்சோலையைக் கன்னியஞ் சோலை என்றும் பொங்கலாயம்மன் சோலை என்றும் வழங்குவர். சேக்கிழார், பெரியபுராணத்தில், கறைக் கண்டன் சருக்கத்தில் கணம்புல்லநாயனரின் ஊரைக் குறிப்பிடும்போது, 'பெருக்கு வடவெள்ளாற்றுத் தென் கரைப்பால் பிறங்கு பொழில் வருக்கை நெடுஞ்சுளை பொழிதேன் மடு நிறைத்து வயல் விளைக்கும் இருக்கு வேளூர்'' எனக் குறிக்கிருர். எனவே இவர் இப்பேளூ ரைச் சார்ந்தவர் என்பது ஒருதலை.

(4) இப்புராண பதிப்பு முன்னுரை. பக். 7.

(5) பிரமராயன் என்ற சிற்றரசன் வேண்டுகோட்படி இயற்றிய தாலப் பாயிரச் செய்யுள். 37 குறிக்கும்.

*சிற்பங்கள் :* ஐந்து தேவகோட்டங்களை உடைய இக்கோயிலைச் சுற்றிலும் பரிவார தேவதைகளுக்குக் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன. இப்பரிவார தேவதைக் கோயில்கள் முதல் பராந்தகன் காலத்தவை. கோயில் மூன்று பிரகார அமைப்பைக்கொண்டது. கோயில் கருவறை, அர்த்தமண்டபம், அந்தரதாளம், நிருத்த மண்டபம் என்ற நான்கு உறுப்புகளைக் கொண்டது. கருவறையை ஒட்டி வடபால் உமைக்குத் தனிக்கோயில் காணப்படுகிறது. இது காலத்தால் பிற்பட்டது. நிருத்த மண்டப தூண் சிற்பங்கள் தாரமங்கல நிருத்தமண்டபத் தூண் சிற்பங்களை ஒத்துக் காணப்படுகின்றன. தாரமங்கலம், தாடிக்கொம்புச் சிற்பங்கள் 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை எனக் கருதப்படுதலால், இந்நிருத்த மண்டபமும் கெட்டிமுதலியார் காலத்தில் (கி. பி 1559-1585) கட்டப் பட்டிருத்தல் வேண்டும்.

இத்தலத்தில் உள்ள மகாவிட்ணு 8 திருக்கைகளோடும, ஐப்படை ஆயுதங்களுடன் விளங்குவதும், முருகவேள், அறுமுகங்களுடன் விளங்குவதும் ஒரு வியத்தகு காட்சி. கோயில் முழுவதும் மூடு கற்களால் பாவப் பட்டுள்ளது. அக்கற்களில் பாண்டியர்களின் மகரச் சின்னங்கள் காணப்படுதலான் பகண்டியர்களின் காலத்தில் பாவப்பட்டிருத்தல் வேண்டும்,

*வியத்தகு காட்சிகள் :*

இததலத்தின் வடபால் சிங்கத்தின் வாயில் புகுந்து கிணற்றிற்குச் செல்வதும், யாளியின் வாயில் கற்குண்டு உருள்வதும், தென்பால் உள்ள தல விருட்சமான பலா மரம் இலுப்பை மரமாகக் காட்சிதருவதும் வியத்தகு காட்சிகளாகும்.

நெடுங்காலமாக வசிட்டரும் ஏனைமுனி புங்கர்களும், இவ்வூரில் வசித்துவந்த காலத்தில் (சோமாவதி சருக்கம் செ. 97) வழிபாட்டிற்காகப் பலாமரம் ஒன்றை உண்டாக்கி வழிபட்டு வருங்கால் துந்துமி என்னும் அசுரன் பலாக்கனியை ஒருநாள் கவர்ந்துசெல்ல, முனிவர் அரக்கனை மலையாகவும், பலாமரத்தை இலுப்பை மரமாகவும் சபித்தார் (துந்துமி சருக்கம் செய் 28) எனத் தலப் புராணம் குறிக்கிறது. இக்காட்சியை இன்றும் காணலாம். மரம் முதுமை அடைந்து கொம்புகள் உயிர் இழந்து காட்சிதருகின்றன கோயிலுக்கு முடுகல் இட்டோர் கிளையின் போக்கிற்குத் தக ஒதுக்கிக் கல் பாவியிருக்கின்றனர்.

*படிமங்கள்:* இவ்வாலயத்தின் தென்கிழக்குப் பகுதியில் உள்ள ஒரு தோட்டத்தில் உழும்போது பஞ்சலோகத்தால் ஆன சந்திரசேகரர், உமா மகேசுவரர், சபாநாயகர் முதலிய படிமங்கள், விநாயகர் முதலிய பரிவாரத் தேவதைகள், பூசைப் பாத்திரங்கள் பலவும், கண்டெடுக்கப்பட்டன. அவற்றில் பல தற்போது சென்னைக் காட்சி சாலையிலும், சில இவ்வாலயத்திலும், காணப்படுகின்றன. இத்தலத்தில் உள்ள சில படிமங்களின்காலம் கி பி. 901க்கு முற்பட்டதெனக் குறிக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் இருந்து எடுத்துச் சென்று சென்னைப் பொருட்காட்சிச் சாலையில் உள்ள ஒரு நடராசர் செப்புத் திருமேனியின காலம் கி. பி 1510 என்றும்; மாசில் வீணையன்-வீணா நாதர் சிலையின் காலம் கி. பி. 900 என்றும குறிக்கப் பட்டுள்ளது.

*கல்வெட்டுக்கள்.* இக்கோயில் நான்கு கல்வெட்டுக் களும், கோயிலை ஒட்டி மேற்பால் உள்ள மலையில் ஒரு கல் வெட்டும் ஆக ஐந்து கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இதுவரை இவற்றை அரசினர் படியெடுத்து வெளியிட

வில்லை. தட்சணாமூர்த்தி கோயிலை ஒட்டி நிறுத்திவைக்கப் பட்டுள்ள ஒரு பலகைக் கல்லில்

*"குருபக்த அபராந்தக பகவத் சந்தி ராதீத்த*
*வரப்ப அபிஸ் லாஹத்ய குருபரப்ரம்ம ஸம்மன்ன*
*அகிலதாப ருத்ரேஸ்வரர் சுவேத சந்திராதித்த*
*பிரதிஸ்டா"* எனப் பொறிக்கப்பட்டுள்ளது

இக்கல்வெட்டு சூரிய சந்திர பிம்பங்கள் பிரதிட்டை செய் யப்பட்டதாகக் குறிக்கிறது. கருவறையை ஒட்டி வடபுறம் இலட்சுமி கோயிலின் முன்பு நிறுத்திவைக்கப்பட்டுள்ள ஒரு பலகைக் கல்லில்

*"ஸ்வஸ்திஸ்ரீ ஏக சாலியாப்த அநகாபல்லி*
*பனஞ்சுகி கமல செவி ஆந்திர பண்டித*
*வாக்வாத சாருவாபிக வதம் கேளிக"*

என எழுதப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டு இலட்சுமி கோயில் திருப்பணி செய் ததைப்பற்றி தெளிவிக்கிறது. இக்கோயிலின் மேற்கு மதில் சுவரில் பதித்து வைக்கப்பட்டுள்ள ஒருகல்லில் உள்ள எழுத்துக்கள் எண்ணெய்ப்பூச்சால் மறைந்துவிட்டன. இக் கோயிலின் முகப்பு வாயிலை ஒட்டி ஒரு கற்பலகையில் பர கேசரி வர்மனின் இரண்டாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (கி.பி 909) காணப்படுகிறது பகுதிக்கல் பூமியில் புதைந்து இருந்ததால் முழு நிலையில் படி எடுக்க முடிய வில்லை. இது வட்டெழுதது கல்வெட்டு, "ஸ்வஸ்திஸ்ரீ. *காண் கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கு யாண்டு 2 ஆவது வீரதீப மகா [தேவ]*க்கு கங்குணுடைய ச"* என்று முடிகிறது.

மற்றும் முன் வாசலின் உட்புறம் நாட்டப்பட்டிருக்கும் கல்லில், தற்காலக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. கி. பி. 1925, ஜனவரி 31-ஆம் தேதி ம. இராமசாமி நாயக்கன் அளித்த நிலக்கொடையைப்பற்றிக் கூறு கிறது. நிலத்தின் விவரம்: சேலம்-டி. வாழப்பாடி, சப் டிவிஷன் க.ச. 308, நெ. பு. ஏ. 3-19-க்கு தீர்வை 6-6-0.

## 2. மோகனூர்: அசலதீபேசுவரன்:

நாமக்கல்லுக்குத் தெற்கே பதினெட்டு கல் தொலைவில் காவிரியின் வடபால் மோகனூர் என்னும் ஊர் உண்டு. இது கருவூருக்கு நேர் வடக்கே காவிரியின் தென்கரையில் வாங்கல் என்ற ஊருக்கு எதிர்க்கரையில் அமைந்துள்ளது. இங்கு எழுந்தருளிய இறைவனை அசலதீபேசுவரன் என்று அழைப்பர்.

*ஊர்ப் பெயர்:* மோகனூர் என்ற ஊர்ப்பெயர் ஆய் வில் பலவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. எப். ஆர். கெமிங்வே, (Hemingway, F. R.) சிவன் முருகவேளைத் தேடி இவ்வூரில் கண்டதால் மகன்+ஊர் > மகனூர் > மோகனூர் ஆயிற்று என்பார்.[6] இறைவன் தேனுயி என்ற இடைக்குல மாதுக்குக் குழந்தை அளித்ததால் மகவனூர் எனவாக அதுவே மோகனூர் எனத் திரிந்தது என்பர்.[7] புலவர் குழந்தை, மோகூர் என்று வழங்கிய பெயரே பின் மேகனூர் என திரிந்தது என்கிறார்.[8]

*வரலாறு:* சங்க காலத்தில் பழையன் என்ற வேளிர் மரபினன் இவ்வூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்டான்.

---

(6) F. R. Hemingway, 'Gazetteer of Trichinopoly'

(7) கொங்கு மண்டலச்சதகம். P. 24

(8) புலவர் குழந்தை, 'கொங்கு நாடு' பக்கம் 157

இதை "மழையொழுக் கருஅப் பிழையா விளையுள் பழையன் மோகூர்." என மதுரைக்காஞ்சி கூறும். சேரன் செங்குட்டுவனின் தண்மனுன் அருகை என்பானைப் பழையன் தோற்றேடச் செய்தபோது, அத்தோல்வி தனக் கேற்பட்டதாகக் கொண்டு செங்குட்டுவன் செங்களம்என்ற இடத்தில் (பதி. 44) பழையனேடு பொருது, அவனுக் குரிய அரணை அழித்தான் (பதி. 44). பின் அம்மன்னனின் மகளிர் கூந்தலை அறுத்துக் கயிருகத் திரித்துக்கட்டி அவனது யானைகளையே பகடுகளாகப் பூட்டிச் சென்ருன். (பதி. 5.) இச் செங்களம் (செங்குளம்) வஞ்சியில் கருவூரில் இருந்து மோகனூர் செல்லும் நெடுவழியில் உள்ள தென்பர். இவ்வூரின் செழிப்பைச் 'செந்நெல் செறிமுகவனூர்' என்று மணியகுலக் காணிப்பாடல் கூறும். இவ்வூர் ஏழாம் நூற்ருண்டில் குமரித்துறை என்ற பெயரானும் வழங்கப்பட்டது. இத்தலத்து அம்பிகையின் முலைப்பால் சுரந்து அருவியாகப் பெருகிக் காவிரியிற் கலப்பதால் குமரித்துறை எனப் பெயர் பெற்றதென்று புராணம் கூறும். அப்பரின் தேவார சேத்திரக்கோவை, 'குமரி கொங்கு' என்றும் திருக்குறுந்தொகை 'கொங்குத்தேன் குமரித்துறை' என்றும் குறிக்கின்றன.

இங்கு எழுந்தருளியுள்ள இறைவனை அசலதீபேசுவரர், குமரீசுவரர், என்றும் இறைவியை மதுகரவேணி, குமரியம்மன் தேனுயி, என்றும அழைப்பர். இத்தலத்தைப் பற்றி சுவையான தொரு வரலாறு உண்டு.

> "நந்தூர் நெடுவயல் சூழும் முகவை நகர்தனிலே
> இந்தூர் சடையன் நசையால் விளக்கப் பொன்னேற்றுதற்கு
> சந்தோச மாயொரு பாவனை கொண்டு நயிருவிற்க
> வந்தோர் குமரியருச்சித்ததுங் கொங்கு மண்டலமே"

எனக் கொங்கு மண்டலச்சதகம் கூறும். [9]

(9) கொங்கு மண்டலச்சதகம். P. 24-25

தேனுயி என்ற இடைக்குலமாது இக் குமரித் துறையில் வசித்துவந்தாள். அவள் தொழில், தினமும் வெளியூர் சென்று பால், தயிர் விற்று வருவது. அன்று வழக்கம் போல் அவள் தயிர் விற்று வரும் வழியில் ஒரு வில்வக் காட்டின் ஊடே வரும் போது ‘பெண்ணே எனக்கு ஒரு விளக்குவை’ என்ற குரலைக்கேட்டுக் குரல் வந்த திசையை நோக்கினுள். என்னே வியப்பு! அக்குரலுக்கு உரியது ஒரு சிவலிங்கம்! அன்று தொட்டு அவள் அந்தச் சிவலிங்கத்திற்கு விளக்கேற்றி வழிபாடு செய்துவந்தாள்.

ஒருநாள் அம்மாது கருத்தரித்தாள், அப்பெண்ணின் திடீர்க் கருத்தரித்தற்குக் காரணம் அறியாது ஊரார் அவளைத் தூற்றினர். உண்மையானதென அறிய வேண்டி அவள் அறியாவண்ணம் அவளைப் பின் தொடர்ந்து சென்றனர். அவள் சிவலிங்கத்திற்கு விளக்கேற்றி வழிபாடு செய்து கொண்டிருந்தாள் அப்போது பெருமழையும் காற்றும் அடித்தும், சுடர் அணையாமலும், அசையாமலும், சுடர்விட்டு எரிந்தது. இதைக்கண்ட ஊரார் அவளைப் புகழ்ந்து அச் சிவலிங்கத்திற்கு ஒரு கோயில் எழுப்பினர்.

இவ்வாறு குமரி பூசித்ததால் குமரீசுரர் என்றும், காற்று, மழையினுல் விளக்கு அணையாதிருந்ததால் அசல தீபேசுரர் என்றும், குமரிக்கு மகவு அளித்ததால் மகவனூர் >கோமகனூர் எனவாயிற்று என்றும் இப்பெண்ணின் பெயரே இறைவிக்கு ஆகி தேனுயி, குமரியம்மன் என்று வழங்கப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

*சிறப்புச் செய்திகள் :*

இறைவியின் பாதத்திலிருந்து காவிரி ஆற்றில் வந்து சேரும் நீர் ஊற்று சமீபகாலம் வரை பாலாய் வந்ததென்றும், எடுத்துக் காய்ச்சியதில் தண்ணீராய் மாறிவிட்டது

என்றும் கூறுவர்.[10] இறைவன் வழக்கத்திற்கு மாறாக மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளது குறிப்பிடத்தக்கது.

இக்கோயிலின் கருவறையைச் சுற்றிப் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இன்னும் அரசினர் படியெடுக்கவில்லை. இவற்றைப் படியெடுத்து வெளியிடுவதன் மூலம் பல புதிய செய்திகள் கிடைக்கலாம்.

## *3. ஆத்தூர்க்கோட்டை -காயநிர்மலேச்சுவரன்:*

ஆத்தூர், சேலம்-கடலூர் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஒரு நகரம். இவ்வூர் சேலத்திற்கு 32 கல் கிழக்கிலும், தம்மம்பட்டிக்கு 20 கல் வடக்கிலும் அமைந்துள்ளது. இவ்வூரின் இடையே தவழும் வசிட்டா நதியின் காரணமாக இவ்வூருக்கு ஆற்றூர் எனப் பெயர் வழங்கப்படுகிறது. கங்கர் ஆட்சிக்காலத்தில் ஆறையூர், அனதகிரி, தபோவனம், என வழங்கப்பட்டது. இஃது பரகேசரிவர்மன் ஆட்சிக்காலத்தில் ஆற்றூர் என வழங்கிய செய்தி கல்வெட்டு வழி அறியலாம்.[11] தற்போது ஆத்தூர் என்று மருவி வழங்கப்படுகிறது. இவ்வூர் மலாடு என்கிற ஜனநாத வளநாட்டு மகதை மண்டிலத்தில் உள்ளது. *அனந்தகிரி* என்ற பெயரும் இவ்வூருக்கு 18-ம் நூற்றாண்டு வரை. நிலவி இருக்கலாம் என F. J. ரிச்சர்டு கருதுவார்.[12] இவ்வாற்றூரில் 1 மைல் சுற்றளவுள்ள ஒரு பாழடைந்த கோட்டை உண்டு. இக்கோட்டையின் வரலாறு இன்னும் சரியாகப் புரியவில்லை என்பர்.[13] இக்கோட்டை கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதென்று

(10) *சிவகவி.* மு. சுப்பையா, 'மோகனூரும் தோழுரும்.' கொங்குநாட்டுக் கோயில். பக். 269.

(11) IMP. Vol. II Page. 1208., No. 53.

(12) S.D.G. Vol. I Part. II.

(13) 'ஆத்தூரும் கோட்டையும்'-வித்துவான். I. நாராயணன், 'ஆத்தூர் பஞ்சாயத்து வைர விழா மலர்'.

கூறப்படுகிறது.[14] இது தவறு. இக்கோட்டை இரண்டாம் நூற்றுண்டில் கட்டப்பட்டதாக இருப்பின் இக்கோட்டைக் கோயில்களில் இருந்து கிடைத்திருக்கும் எழு கல்வெட்டுக்களில் ஒன்றிலாவது இக்கோட்டையைப் பற்றிய குறிப்புகள் காணப்பட்டிருக்கும்.

இக்கோட்டை கெட்டி முதலியார், என்பவரால் கட்டப்பட்டது. இவர் நாயக்கர் ஆட்சிக்காலத்தில் சேலம், கோவைப் பகுதிகளை ஆண்டுவந்த ஒரு பாளையக்காரர் என வில்சன் கூறுகிருர். இப் முதலியார் காலத்தில்தான் நாமக்கல், சேந்தமங்கலம், சங்ககிரி, சேலம், சேமத்தூர், அனந்தகிரி (ஆத்தூர்), பரமத்திக்கோட்டைகள் கட்டப்பட்டன என்று டெய்லர் விளக்குகிருர்[16] எனவே இக்கோட்டை, கெட்டி முதலியார் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1559-1585) கட்டப்பட்டது என்பது தெளிவு. இக்கோட்டைப் பெருமாள் கோயிலும் இவரால் கட்டப்பட்டதென்பது செவி வழிச் செய்தியாயினும்; இம்முதலியாரின் சிலை இக்கோயிலில் இடம் பெறுதலானும் உறுதியாகிறது.

இக்கோட்டை இவ்வூரில் கெட்டி முதலியாரால் கண்டெடுக்கப்பட்ட ஏழு கொப்பரைப் பொன் புதையலைக் கொண்டு கட்டப்பட்டது எனத் தெரிகிறது. தற்போது அக்கொப்பறையில் ஒன்று சென்னைப் பொருட்காட்சியிலும், மற்ருென்று இவ்வூர்ப் பெருமாள் கோயிலிலும் காணப்படுகிறது. இப்புதையல் எடுக்கப்பட்டது உண்மையெனக்கொண்டால் இதன்மூலம் அவருக்கு 3,505,420 பவுன்கள் கிடைத்திருக்கலாம்என ரிச்சர்டு கணிக்கிருர்.[17]

(14) S. N இளங்கோ 'நகரப்பிதா' பஞ்சாயத்து வைரவிழா மலர்'

(15) 'Wilson-Catalogue' II Page. XI.

(16) W Taylor - OH. Mss. Vol II Page. 163, 167.

(17) S.D.G. - Vol Page. 297.

இக்கோட்டையில் கொடிய முதலைகள் திரிதற்கு இடமான அகன்ற அகழியும், உயர்ந்த நெடுமதிலும், பீரங்கி அமைந்துள்ள மதிற் குமிழிகளும், ஒய்வு மண்டபக் குமிழிகளும், பகைவர் எளிதில் நுழைய முடியாக் குறுவாயில்களும், அமைந்துள்ளன. இக்கோட்டையில் நான்கு நெல் களஞ்சியங்களும், பாழடைந்த மண்டபங்களும், இராணியின் அந்தப்புறமும், இரண்டு நீச்சல் குளமும், இடிந்த மதிலும் காணக்கிடைக்கின்றன. இக்கோட்டை முனியப்பன் கோயில் ஒரு காலத்தில் கொற்றவைக் கோயிலாக இருந்ததாகக் கூறப்படுகிறது. தற்போது இக்கோயில் புதுப்பிக்கப்பட்டு விளங்குகிறது. இக்கோட்டையில் உள்ள சிவன் கோயில் வரலாற்றுப் புகழ்பெற்றது. இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் காயநிர்மலேச்சுவரன் என்று அழைக்கப்படுகிறான். இவனைக் கல்வெட்டுக்கள், 'திருமேற்றளி ஆழ்வார்,' 'திருமேற்றளி நாயக்கர்' எனக் கூறுகின்றன.[18] இக்கோயில் அமைப்பையும்' சிற்பங்களையும் ஆயும்போது ஆதித்தன் கலைப்பணி என்பது தெளிவாகிறது.

இக்கோயில், இரண்டு தளங்களை உடைய விமானம் கொண்டது இரண்டு முதல் ஐந்துவரை விமானத் தளங்கள் அமைக்கும் முறை ஆதித்தன் காலத்தது. இக்கோயில் விமானத்தூபி கீழையூர் ஸ்ரீ கோயில் தூபியை ஒத்துக் காணப்படுகிறது. கூரைவண்டிக்கூடுபோல் காட்சிதருகிறது. கருவறை சதுர வடிவமானது, இதன் முன் அர்த்த மண்டபம் காணப்படுகிறது. அர்த்த மண்டபத்தை ஒட்டி அமைந்துள்ள மகாமண்டபம் கடந்த 40 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டுள்ளது. ஐந்து தேவ

---

(18) 403 of 1913.. 404 and 407 of 1913.

கோட்டங்களை உடைய இக் கோயிலில் அண்ணுமலையாரை இருக்கவேண்டிய மேற்குக் கோட்டத்தில் விநாயகரை ஏற்றியுள்ளனர். ஏனைக் கோட்டங்கள் முறையே பிரமன் துர்க்கை, விநாயகர், தட்சிணுமூர்த்தி அமர்ந்துள்ளனர். இக்கோயில் துர்க்கை, கானத்து எருமைக் கருந்தலைமேல் நின்ருடும் கண்டயூர் (ஆதித்தன் காலம்) துர்க்கையை ஒத்துக் காணப்படுகிறது. ஆதித்தன் கலைப்பாணியின் உறுப்புக்களான கூடுகள் மனிதத்தலையுடையதாகவும், கொடிக்கருக்கு நுனியில் வட்டங்கள் இவற்ருல் அலங்கரிக் கப்பட்ட கொடுங் கைகளும், யாளிவரியும் நோக்கின் இக் கோயில் ஆதித்தன்காலக் கோயில் என்பது தெளிவா கிறது. காசிநாதர், பைரவர், மண்டபக் கோயில்களில் அமையாமல், தற்போது கோயிலுள் எடுத்து வைக்கப் பட்டுள்ளது. அம்மனுக்குத் தனிக்கோயில் கட்டும் முறை ஆதித்தன் காலத்தில் இல்லை. இங்கு அம்மனுக்குத் தனிக் கோயில் உண்டு. இக்கோயில் பணி கடந்த இரு நூற்ருண்டுகளில் கட்டப்பட்டுள்ளது என்பது தெளிவா கிறது. இக்கோயிலில் இருந்து நமக்குக் கிடைக்கும் மிகப் பழமையான கல்வெட்டு ஆதித்த சோழனின் மகன் முதல் பராந்தகனுடையது. மேற்கூறிய பல காரணங்களைக் கொண்டு ஆராயின் இக்கோயில் ஆதித்தன் கலைப்பாணி என்பது வெள்ளிடைமலையாம்.

*கல்வெட்டுக்கள் :*

இக்கோயிலில் அழிந்துபட்ட கல்வெட்டுக்கள் நீங்க ஐந்து கல்வெட்டுக்களை இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறை 1917-இல் படியெடுத்தது. இக்கல்வெட்டுக்களின் மூலம், இதுவரை பதிப்பிக்கப்படவில்லை.

*முதல் பராந்தகன் :* **(907 — 953) :**

இக்கோயில் கீழ்த்தளத்தில் சோழர்காலக் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. 28 வரிகளை உடைய இக் கல்

வெட்டு முதல் பராந்தகனின் 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 911).

"ஸ்வத்தசிரீ கோப்பரகேசரி பண்மர்க்கு யாண்டு 14-ஆவது மிலாட்டு ஆற்றூர் கூற்றத்துப் பிரம்மதேயம் மலையமான் ஆற்றூர் திருமேற்றளி ந(ாய்)க்கர்கு பெருமாள் கம்மிகள் (Servents) பெருமங்களமுடையானும், இருமடிமாயிலட்டிக்குமாக (both) மிலாடும், வாணகப்பாடியும், மொரமும், சுங்கமும், பாட்டத்துக்கு ஆழ்கின்ற நின்று வடுதுறைய நும் கழஞ்சே காற் த— —காமனும் இம்மூவோம் இவ்வூர்த் திருமேற்றளி ஆள்வார்க்கு வைத்த திருச்செந்நடை நிசதி நெல்லுக் குறுணி நாழி அரிசியால் சந்திராதித்தவற் வைத்தொ(மு)த்துறையில் அங்கமாள்வார் இயநம் (இத்தந்மம்) இரச்சிக்க இரட்சித்தார் பாதம் எங்கள் தலைமேலென இதுக்கு சுகிதம் (இடையூறு) செய்வான் ஏழகத்துக் கீழ் எச்சம் அறுவான்.[19]"

எனக் கூறுகிறது. சேலம் கோவை மாவட்டங்களில் கிடைக்கும் கல்வெட்டுக்களினால் பராந்தகனின் ஆட்சி கொங்கு மண்டலம் முழுதும் பரவியிருந்தது என அறியக் கிடைக்கின்றது.[20] 1) பெருமாள், 2) பெருமங்கலமுடையான், 3) காமன், இம்மூன்று கோயில் பணியாட்கள் கொடுத்த நெல் தானம் பற்றி இக்கல் வெட்டு விளக்கும். அரசனின் 14-ஆம் ஆட்சியாண்டு எனக் குறிப்பதால் கி.பி. 911-இல் கொடுக்கப்பட்டதென அறிகிறோம்.

மூன்றும் குலோத்துங்கன் காலம் (1178–1218):

மேற்குப் பிரகாரத்தில் மற்றுமொரு சோழர் கல்வெட்டு உண்டு. இவ்வாற்றூர் திருமேற்றளியுடைய நாய

(19) S.I.I, Vol. X1X No. 351.
(20) Mysore Gazetteer, Vol. Page, 917.

ரூருக்கு வன்னெஞ்சப் பெருமாள் தம் 32-ஆம் ஆட்சி யாண்டில், விளக்கு எரிக்க 200 குழி நன்செய் நிலத்தைக் கொடுத்த செய்தியைக் கூறுகிறது.[21] இவ்வன்னெஞ்சப் பெருமாள் யார்? என்பதில் பெரும் குழப்பமாகவிருக்கிறது. இரண்டாம் இராசாதிராசனே எதிரிலிப்பெருமாள் எனவும், மூன்றும் குலோத்துங்கனே நெறியுடைப்பெருமாள் எனவும் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டால் அறிகிறோம்.[22] மேலும் மூன்றும் குலோத்துங்கனே முடிதலைக்கொண்ட பெருமாள்.[23] என்றும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. மேலும் இவன் ஆட்சியின்கீழ், விடுகாதழகியபெருமாள்[24] மகதைப் பெருமாள்.[25] வாணிலைகண்ட பெருமாள்.[29] என்றும் தயாளுநல்லபெருமாள்.[27] என்றும் பல குறு நில மன்னர், அரசியல் அதிகாரிகள், பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன விக்கிரம சோழனுக்குப் பிறகு கொங்குநாட்டைப் பெருமாள் (Unknown) என்பவன் 35 ஆண்டுகள் ஆண்டான் என C M. இராமச்சந்திரன் செட்டியார் கருதுகிறார்.[28] இவன் ஆட்சிக்காலக் கல் வெட்டு ஒன்றுகூடக் கிடைக்கவில்லை என்பர்.[29] எழுத்தின் வடிவம், கொண்டு நோக்கின், இக்கல் வெட்டு மூன்றும் குலோத்துங்கன் காலத்ததாகவே கருதயிடமுண்டு. இவனுக்கு வனநெஞ்சப் பெருமாள் என்ற பெயர் ஒனறு வழங்கப்பட்டிருததல் இக்கல்வெட்டால் அறியக் கிடைக் கிறது.

---

(21) 405 of 1913.
(22) Ep Ind., Vol XXI, No. 3I.
(23) 266 of 1913. (24) S.I.I. Vol. VII No. 127.
(25) S.I.I. Vol. VIII No. 148
(26) S J.I. Vol. VII No. 942, No. 146.
(27) 456 of 1913.
(28) Q J.M.S. Vol. XXI (N. Series) P. 46.
(29) புலவர் குழந்தை, கொங்குநாடு' பக். 526.

கிருட்டிணதேவராயன் காலம் : (கி. பி. 1509-1529)

இக்கோயிலின் வடக்குப் பிரகாரத்தில் கிருட்டின தேவராயர் காலக் கல்வெட்டு, சக. 1431. ஐப்பசி. 22. (கி. பி. 1509) ஆற்றூர் நாட்டில் உள்ள கல்லிநத்தம்.[30] என்ற ஊரைத் துளுக்கண்ண நாயக்கன், இறைவன் அறையூர் அருணகிரிநாதரின் மகன் பத்மநாபபட்டன் என்பவனுக்குக் கொடுத்தான் எனக் குறிக்கிறது.[31] இக் கல்வெட்டுக் குறிப்பிடும் துளுக்கண்ண நாயக்கன் கிருட் டிண தேவராயர் ஆட்சியில் மகதை மண்டலத்தின் தலைவன் ஆவான். இவன் இரண்டாம் நரசிம்மன் ஆட்சிக் காலம் தொட்டுக் கிருட்டிணதேவராயர் காலம்வரை சுமார் 25 ஆண்டுகள் ஆண்டார் எனத் தெரிகிறது.[32] இக்கல்வெட்டுக் குறிப்பிடும் பத்மநாபபட்டனின் தந்தை திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் எனக் கருதமுடியாது. அருணகிரிநாதரின்பால் பற்றுக்கொண்ட வேறு ஒருவரின் பெயராக இருக்கலாம். திருப்புகழ் 'அருணகிரிநாதரின் காலம் இரண்டாம் தேவராயன் காலம் (1426-1450).

இக் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் மற்றொரு கிருட்டிணதேவராயர் காலக் கல்வெட்டு, சக. 1435. சித்திரை 13. மகதை மண்டிலத்தின் தலைவனான அக்கி திம்மைய நாய்கன் வில்லவராயன் நத்தம் என்ற ஊரை இறைவன் அறையூர் அருணகிரிநாதரின் மகன் சீரங்க படடனுக்கு வழங்ினான எனக் கூறுகிறது.[33] இக்கல் வெட்டு குறிப்பிடும் அக்கி திம்மைய நாயக்கன் கி. பி. 1510-இல் துளுக்கண்ண நாய்க்கனுக்குப் பின் ஆட்சிக்கு

(30) 'கல்லாநத்தம்' என தற்போது வழங்கப்படுகிறது.
(31) 406 of 1913..
(32) 403 Thammampatty Ins. I of 1930-31.
(33) 403 of 1913.

வந்தவன். இவ்வூர்க் கொடை சக. 1435 என்பதால் [கி. பி. 1513 ஏப்ரல் 8-ஆம் தேதி வெள்ளிக்கிழமை எனத் திரு. சுவாமிக்கண்ணுப் பிள்ளை கணிக்கிறார்] இவன் ஆட்சிக்கு வந்த மூன்றுமாண்டில் இவ்வூர்க் கொடை வழங்கப்பட்டு இருக்கிறது. இக்கல்வெட்டு குறிக்கும் *சீரங்கபட்டன்* முன் கல்வெட்டு குறிக்கும் பத்மநாப பட்டன் சகோதரர் என்பது தெளிவு. இக்கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் முற்றுப்பெறாத ஒரு கல்வெட்டு, விஜயநகரமன்னன் வீரப்பிரதாப கிருட்டினராய மகா ராயனைப் பற்றியது.[34]

## 4. நன்செய் இடையாறு :

### திருவெள்ளீச்சுரன் :

நாமக்கல்லுக்குத் தென்மேற்கில் 10 கல் தொலைவில் உள்ள ஊர் இவ்வூரை இராசராசேசுவர வளநாட்டு இடையாறு என்று கல்வெட்டுக் குறிக்கிறது.[35] இவ்வூருக்கு இராசேந்திர சிம்ம சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் இராசராசன் காலத்தில் வழங்கிற்று. இப்பெயர் இராசேந்திர சோழன் பிறந்ததின நினைவாக வழங்கப்பட்ட ஊராக இருக்கலாம். இக் கோயிலின் வடக்குச் சுவரில் ஒரு சிதைந்துபட்ட இராசராச சோழனின் ஏழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, (கி. பி. 892) திருமன்னிவளர என்று தொடங்கி கோயில் பணியாயர்களுக்கு, நெல், வேட்டி முதலியவை வழங்க, இராசேந்திரசிம்ம சதுர்வேதி மங்கலச் சபையார் நிலம் விட்ட செய்தியைக் குறிக்கிறது. இந் நன்செய் இடையாற்றுக்கும் மேற்கில் 12 கல் தொலைவில் காவிரியின் வடகரையில் இராசவாய்க்கால் என்னும் ஒரு கால்வாய் வெட்டப்பட்டுக் காவிரி நீர் இக்கால்வாய் வழியே ஓடிவந்து இவ்வூரைச் செழிப்பாக்குகிறது. இக்

---

(34) 451 of 1913. (35) 42 of 1913.

கால்வாய் முதலாம் இராசராசன் காலத்தில் வெட்டப்பட்டதால், இராச வாய்க்கால் என்று பெயர் வழங்கப்பட்டிருக்கலாம் என்பர்.[36] இவ்வூரில் இச்சிவன் கோயிலேயன்றி ஒரு விட்ணுக்கோயிலும் பல கிராமதேவதைக் கோயில்களும் காணப்படுகின்றன.

## 5. உத்தமசோழபுரம் : கரபுரநாதர் :

இவ்வூர் சேலம் மாவட்டத்தில் சேலம்-பவானிப் பெருவழியில் உள்ள ஒரு சிற்றூர். இங்கே புகழ்பெற்ற ஒரு சிவன் கோயில் காணப்படுகிறது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைக் *கரபுரமுடைய நயினர்*[37] கரபுரமுடைய தம்பிரான்.[38] எனக் கல்வெட்டுக்கள் போற்றுகின்றன.

*ஊர்ப்பெயர்:* இவ்விறைவன் எழுந்தருளியுள்ள இவ்வூர் சேல நாட்டின் உப நாடான இராசீபுர நாட்டில் உள்ளதென கொங்குமண்டல ஊர்த்தொகை குறிக்கும்.[39] இவ்வூரைக் கரபுரம் எனத் தல புராணம் குறிக்கிறது.[40] கோயில் கல்வெட்டு இவ்வூரைச் சேலநாட்டு உத்தமசோழபுரமான மேல்தலைக் காவிரிப்பூம்பட்டணம் என்று கூறும்.[41] கரபுரம் என்ற பழைய பெயர் உத்தமசோழன் காலத்தில் உத்தமசோழபுரம் என்று மாற்றப்பட்டிருக்கலாம். ஆட்சிகாலத்தில், இறைவன் பெயரால் ஊர்ப்பெயர் அமைந்து பின் தங்கள் பெயரால் ஊர்ப்பெயரை மாற்றி வழங்கியதற்கும் பல சான்றுகள் கிடைக்கின்றன.

---

(36) பா.ரா. கந்தசாமி, 'கல்லூரி திறவிய வள்ளல்' P. 11. கந்தசாமிக் கண்டர் கல்லூரி மலர். 1967.
(37) S.I.I. Vol. IV No 166.
(38) ,, 164.
(39) கொங்குமண்டல சதகம் - வால சுந்தரக் கவிஞர் ஊர் தொகை 34.
(40) கரபுரநாதர் தல புராணம் - சொக்கலிங்கப் புலவர்.
(41) S.I.I. Vol. IV No. 164.

*தலபுராணம்* : இத்தலத்திற்குரிய புராணம் ஒன்று கரபுரநாதர் தலபுராணம் என்னும் பெயரில் ஒரு பழைய சுவடி கிடைத்துள்ளது. இதன் ஆசிரியர், யார் எனத் தெரியவில்லையெனக் கூறுவர்.[42] S.M *நாராயணசாமிப் பிள்ளை* 'இந்நூலின் ஆசிரியர் சேலம் தலபுராணம், திருவெள்ளூர் புராணங்களை எழுதிய சொக்கலிங்கப் புலவரே என்றும், மூன்று புராணங்களையும் ஒத்திட்டுப் பார்த்ததில் செய்யுட்போக்கும் கற்பனைகளும், சொற்சுவை, பொருட்சுவைகளும் ஒத்து இருப்பதால் இக்கருத்து உறுதியாகிறது என்றும் கூறுவார்.[43] இங்கே எழுந்தருளியுள்ள முருகன்மீது அருணகிரிநாதர் பாடிய இரண்டு திருப்புகழ் பாடல்களும் உள.

கல்வெட்டுக்கள் :

டாக்டர் உல்ஸ் என்ற செருமானியர் 1888-இல் இக்கோயிலில் இருந்து மூன்று கல்வெட்டுக்களைப் படியெடுத்தார். 1924-ஆம் ஆண்டு *கிருஷ்ண சாத்திரி* அவர்களால் மூலப் பதிப்பிக்கப்பட்டது.[44] கருவறையின் மேற்குச் சுவரில் ஒரு பாடல் சாசனம் உண்டு. அதன் வடிவம் சிதைந்து முதல் நான்கு வரிகள் மட்டுமே கிடைத்துள்ளன.

> " *சங்கட்டெல் கொழிய(ர்) பொன் கொட்டை வா*
> *ழ சதி மறையோன் செங்கை யடியர்க்கு பொன்*
> *சென்னி பொன்னுயன் செழ*
> *ஞ்(ச்) சிலம்பில் கொங்கோனே* "

என்று முடிகிறது.

---

(42) புலவர் குழந்தை, 'கொங்குநாடு'.
(43) திருவெள்ளூர் புராணம், 'பதிப்பு முன்னுரை' பக்.3. 1927
(44) S.I.I. Vol. IV 164-166.

கால்வாய் முதலாம் இராசராசன் காலத்தில் வெட்டப்பட்டதால், இராச வாய்க்கால் என்று பெயர் வழங்கப்பட்டிருக்கலாம் என்பர்.[36] இவ்வூரில் இச்சிவன் கோயிலேயன்றி ஒரு விட்ணுக்கோயிலும் பல கிராமதேவதைக் கோயில்களும் காணப்படுகின்றன.

## 5. உத்தமசோழபுரம் : கரபுரநாதர் :

இவ்வூர் சேலம் மாவட்டத்தில் சேலம்-பவானிப் பெருவழியில் உள்ள ஒரு சிற்றூர். இங்கே புகழ்பெற்ற ஒரு சிவன் கோயில் காணப்படுகிறது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைக் *கரபுரமுடைய நயினார்*[37] கரபுரமுடைய தம்பிரான்.[38] எனக் கல்வெட்டுக்கள் போற்றுகின்றன.

*ஊர்ப்பெயர்:* இவ்விறைவன் எழுந்தருளியுள்ள இவ்வூர் சேல நாட்டின் உப நாடான இராசிபுர நாட்டில் உள்ளதென கொங்குமண்டல ஊர்த்தொகை குறிக்கும்.[39] இவ்வூரைக் கரபுரம் எனத் தல புராணம் குறிக்கிறது.[40] கோயில் கல்வெட்டு இவ்வூரைச் சேலநாட்டு உத்தமசோழபுரமான மேல்தலைக் காவிரிப்பூம்பட்டணம் என்று கூறும்.[41] கரபுரம் என்ற பழைய பெயர் உத்தமசோழன் காலத்தில் உத்தமசோழபுரம் என்று மாற்றப்பட்டிருக்கலாம். ஆட்சிகாலத்தில், இறைவன் பெயரால் ஊர்ப்பெயர் அமைந்து பின் தங்கள் பெயரால் ஊர்ப்பெயரை மாற்றி வழங்கியதற்கும் பல சான்றுகள் கிடைக்கின்றன.

(36) பா.ரா. கந்தசாமி, 'கல்லூரி திறுவிய வள்ளல்' P. 11. கந்தசாமிக் கண்டர் கல்லூரி மலர். 1967.
(37) S.I.I. Vol. IV No 166.
(38) ,, 164.
(39) கொங்குமண்டல சதகம் - வால சுந்தரக் கவிஞர் ஊர் தொகை 34.
(40) கரபுரநாதர் தல புராணம் - சொக்கலிங்கப் புலவர்.
(41) S.I.I. Vol. IV No. 164.

*தலபுராணம்* : இத்தலத்திற்குரிய புராணம் ஒன்று கரபுரநாதர் தலபுராணம் என்னும் பெயரில் ஒரு பழைய சுவடி கிடைத்துள்ளது. இதன் ஆசிரியர், யார் எனத் தெரியவில்லையெனக் கூறுவர்.[42] S.M *நாராயணசாமிப் பிள்ளை* 'இந்நூலின் ஆசிரியர் சேலம் தலபுராணம், திருவெள்ளூர் புராணங்களை எழுதிய சொக்கலிங்கப் புலவரே என்றும், மூன்று புராணங்களையும் ஒத்திட்டுப் பார்த்ததில் செய்யுட்போக்கும் கற்பனைகளும், சொற்சுவை, பொருட்சுவைகளும் ஒத்து இருப்பதால் இக்கருத்து உறுதியாகிறது என்றும் கூறுவார்.[43] இங்கே எழுந்தருளியுள்ள முருகன் மீது அருணகிரிநாதர் பாடிய இரண்டு திருப்புகழ் பாடல்களும் உள.

கல்வெட்டுக்கள் :

டாக்டர் உல்ஸ் என்ற செருமானியர் 1888-இல் இக்கோயிலில் இருந்து மூன்று கல்வெட்டுக்களைப் படியெடுத்தார். 1924-ஆம் ஆண்டு *கிருஷ்ண சாத்திரி* அவர்களால் மூலப் பதிப்பிக்கப்பட்டது.[44] கருவறையின் மேற்குச் சுவரில் ஒரு பாடல் *சாசனம்* உண்டு. அதன் வடிவம் சிதைந்து முதல் நான்கு வரிகள் மட்டுமே கிடைத்துள்ளன.

> *" சங்கெட்டல் கொழிய(ர்) பொன் கொட்டை வா*
> *ழு சதி மறையோன் செங்கை யடியர்க்கு பொன்*
> *சென்னி பொன்னுயன் செழு*
> *ஞ்(ச்) சிலம்பில் கொங்கோனை "*

என்று முடிகிறது.

---

(42) புலவர் குழந்தை, 'கொங்குநாடு'.
(43) திருவெள்ளூர் புராணம், 'பதிப்பு முன்னுரை' பக்.3. 1927
(44) S.I.I. Vol. IV 164-166.

இக்கோயிலின் மகாமண்டபத்தில் பாவப்பட்டுள்ள ஒரு கல்லில்

“ ஸ்வஸ்தஸ்ரீ இராஜயிரா
ஜ தேவர்க்கு யாண்டு (9)
(ஆ) வது—பல்லவரை
யன் நாட்டு உத்தமசோ
ழபுரத்து கரபுரமுடைய ந
ாயனார் கோயிலில் —
— குந்தவ பெருமாள்
சுந்தர தேவரும், நாச்சி.
மாரிருவரும் மின்ளையா(ர்) இ:
சப(ரும்) இராசேந்திர சோழ
தேவர்க்கு எட்டாவதில்
கலிகடிந்த பச்ச்செத்திற்கு —[45]”

என முடிகிறது.

இக்கல்வெட்டு, அழிந்துபட்ட நிலையில் இருப்பதால் முழுநிலையில் கிடைக்கவில்லை. இக்கல்வெட்டு. சுந்தர சோழன், இராசேந்திரசோழன், நாச்சியார் பற்றி குறிக்கிறது, அரசன், இராஜராஜதேவன் எனக் குறிப்பதால் இது இராஜராச சோழனின் 9-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு எனத் துணியலாம்,

*நிலக்கொடை :*

முவராய கண்டன், கண்டநாடு கொண்டு, கொண்ட நாடு கொடாதானுகிய கிருட்டினதேவராயரின் 27-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1532) ஒன்று காணப் படுகிறது.[46] இவ்வுத்தம சோழபுரமான மேல்தலைக்

(45) S.I.I. Vol. 166.
(45) S.I.I. Vol. IV. No. 164.

காவிரிப்பூம்பட்டணத்தில் வாழ்ந்துவந்த சோழஞ் செட்டி ஆதித்த தேவன் இக்கோயிலுக்கு நிலத்தானம் செய்தான். இந்நிலம் நாட்டாமங்கலத்தில் உள்ள நாற் பாக்கெல்லை யும், மேல் நோக்கிய கிணறும், மாவிபடுகாடும், தேன்படு வரையும், மீன்படு சுனையும் கொண்ட பகுதியும், சுவதா புரத்து ஏரிக்கு (சிவதாபுரம்) கீழ்ப்பால் உள்ள நன்செய் நிலத்தையும் கொடுத்தான். இந்நிலத்தின் பாசனம் பெரி யேரின் மேலை மதகு நீரால் பயிர் செய்யப்பட்டு வந்த தைப் பற்றியும் குறிக்கிறது. இவ்வாறு கோயிலுக்கு நிபந்தமாக வழங்கப்படும். கொடைக்குத் தீங்கு நினைத் தாலோ அல்லது தீங்கு செய்தாலோ - சில சாபத்தை ஏற்கவேண்டிவரும். கோயில் கொடைகளுக்குத் தீங்கு செய்தவன், "*கங்கை முதல் குமரிவரை எழுநூற்றிக் காதத்திலுஞ் செய்தார் செய்த பாவத்துப் படுவான்* என்றும், *திருவேங்கடமுடையானுக்குத் துரோகியாகி, மாதாபிதா குரு மூவரையும் கங்கைக் கரையிலே வதைத்த குற்றத்தில் போகக் கடவன்.*" என்றும், "*மது ராந்தகன் கலச்சோற்றைத் தின்பான்*" என்றும், "*துலுக்கரிலே யாதாம் ஒருவர் தீங்கு செய்தால் வகிறு இறச்சியைத் தின்ற குற்றத்திலே போவான்*" என்றும், கல்வெட்டுக்கள் பலவாறுக் கூறும். இக்கல்வெட்டில் காப்பாக, இக்கொடைக்குத் தீங்கு நினைத்தவன் கங்கைக் கரையில் குரால் பசுவைக் கொன்ற குற்றத்தில் போவான் என்றும், அவனுக்கு எழுபிறப்பும் குழந்தைப் பேறு கிடைக்காது (ஏழெச்ச *மறுப்பான்*) என்றும் குறிக்கப் பட்டுள்ளது இக்கொடையைச் "செப்பிலும், சிலையிலும் வெட்டிக்கொடுத்தேன்." எனக் குறிப்பதால், கொடை யைக் கல்லில் பொறித்ததோடு செப்பேட்டிலும் எழுதி வைத்தான் என்பது தெளிவு.

6. ஆறகழூர் : காமநாதர் :

ஆறகழூர் சேலம் மாவட்டத்தில் ஆற்றூர் வட்டத்தில் கீழ்க்கோடியில் அமைந்துள்ளது. இவ்வூர் வசிட்டா நதியின் தென்கரையில், விளங்குகிறது. இவ்வூரை 'ஆறை' எனப் பல தனிப்பாடல்களும், காமநாதர்கோவைப் பாடல்களும், குறிக்கின்றன. இவ்வூர்ச் சிவன் கோயில் கல்வெட்டுக்கள், ஆறகழூர், ஆறகளூர் என்றும், கொங்கு மண்டலச் சதகம் இவ்வூரை 'ஆறை' என்றும் வழங்கும். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், முற்காலத்தில் இவ்வூர் கோட்டையாக விளங்கிற்று. அக்கோட்டைக்குப் பெரியாரை என்று பெயர் வழங்கப்பட்டது; ஆறையும் (கோட்டை + அகழி) அகழியும் சூழ்ந்து விளங்கியதால் ஆறகழூர் எனப் பெயர் பெற்றதென்பர்.[47] கொங்கு மண்டலச்சதக உரையாசிரியர் ஒன்றன்பின் ஒன்றாக ஆறு அகழிகள் சூழ்ந்த ஊர் (ஆறு+அகழி+ஊர்) எனறலின் ஆறகழூர் என்று வழங்கப்பட்டதென்பர்.[48] இரிச்சர்டு, ஆறு அகழிகள் (Six trenches) உடையது இவ்வூர் எனப் பொருள்கொண்டு ஆறகழூர் என மாறிற்று என்பர்.[49] ஆறும் அகழியும் சூழ்ந்த ஊர் என்ற கருத்தே வலிவுடைத்து. இன்றும், இவ்வூரின வடபால் வெள்ளாறும், ஏனைப் பக்கங்களில் அகழிப் பள்ளங்களும் இருப்பதைக் காணலாம்.

இவ்வாறகழூர், மலாடு என்றும் ஜனநாத வளநாட்டில் மகதை மண்டலத்து ஆற்றூர்க் கூற்றத்தில் உள்ளதெனக் கல்வெட்டுக்கள் பேசுகின்றன. மாவலிவாண வமிசவத்தரான வாணர் என்போர் சோழர்களின் கீழ் இருந்து இப்பகுதியை ஆண்டுவந்தனர்.

(47) தமிழகம் ஊரும் பேரும், பக். 78.
(48) கொங்குமண்டலச்சதகம் P. 59.
(49) S.D.G. P. 294.

இவ்வூரில் காமநாதர் என்ற சிவன் கோயிலும், வரதராசர் என்ற பெருமாள் கோயிலும் சோழீச்சுவரம் என்ற மற்றுமொரு அழிந்துபட்ட சிவன் கோயிலும் உண்டு. இங்கெழுந்தருளியுள்ள இறைவனைத் தாயினும் நல்ல பெருமான் என்று ஆறகழூர்க்கோவையும் கல்வெட்டும் குறிக்கின்றன. இக்கோயிலில் கிடைத்த மிகப்பழைய கல்வெட்டுக்கள் மூன்றும் குலோத்துங்கனுடையவை இக்கோயிலை மூன்றும் குலோத்துங்கனின் கீழ்க் குறுநில மன்னனாக இப்பகுதியை ஆண்டுவந்த தாயினும் நல்லபெருமாள் மகதைப்பெருமான பொன்பரப்பினான், வாணகோவரையன். எனப் பலவாறு வழங்கப்படும். வாணகோவரையன் கட்டிய கோயில் மதிலைப் "பொன்பரப்பிய பெருமாள் திருமதில்" என்று ஒரு கல்வெட்டுக் குறிக்கிறது.

*இறைவன் :*

இங்கெழுந்தருளியுள்ள இறைவனைக் காமநாதர் என்றும், இறைவியைப் பெரியம்மை என்றும் கோவைப் பாடல்கள் உணர்த்துகின்றன.[50] கல்வெட்டுக்கள் திருக்காமேச்சுவரமுடைய நாயனார்.[51] திருக்காமேச்சுவரமுடைய தம்பிரானார்.[52] என்று புகழ்கின்றன. இவ்விறைவன் தாயினும் நல்ல பெருமாள் என்று வழங்கப்பட்ட செய்தியைப் பேராசியர், மு. இராகவையங்கார் குறிக்கிறார்.[53]

காமனைப் பூசித்து வரம் பெற்றதால் இவ்விறைவனுக்குக் காமநாதர் என்ற பெயர் வந்ததென்று கோவைப் பாட்டு உரைக்கிறது.[54] இச் செய்தியைச்

*"சங்கீன்ற முத்தத்னைத் தன்னினமென்றே கருதி*
*அங்கங் குருகணைக்கும் ஆறையே-எங்கோன்*

---

(50) 'ஆறகழூர் காமநாதர் கோவை' செய். 42, 164 165.
(51) 410 of 1913. (52) 408 of 1913.
(53) சாசன செய்யுள் மஞ்சரி.

*முருகன் அவதரியா முன்னாளில் காமன்*
*உருவமுடன் பூசித்த ஊர்.''*

என்று ஒரு தனி பாட்டு புகழ்கிறது.

*பாடல் பெற்ற தலம் :*

இவ்விறைவன் மீது '*காமநாதர் கோவை*' என்ற ஐந்திணைக் காமத்தைப்பற்றிய 394 துறைகளை விளக்கும் கட்டளைக் கலித்துறைப் பாடற்சுவடி ஒன்று கிடைத்துள்ளது. இக்கோவை காமநாதரைப்பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது, இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை[55] இதைப் பதிப்பித்த ஆசிரியர் 23 பாடல்களைத் தாம் பாடிச் சேர்த்துப் பதிப்பித்துள்ளார்.

*கோயில் அமைப்பு :*

முகப்புக் கோபுரம் மூன்று தளங்களைக் கொண்டது. மூலத்தானக் கோபுரம் ஒருதளம் கொண்டது. கருவறை சதுரவடிவமானது. கருவறை முன், அர்த்த மண்டபமும் மகாமண்டபமும், சபா மண்டபமும் உள்ளன. ஐந்து தேவ கோட்டங்களில் முறையே கணபதி, தட்சிணாமூர்த்தி அண்ணாமலையார், பிரமன், துர்க்கை, ஆகியோர் காணப்படுகின்றனர். சண்டேசுவரர், முருகன், ஆலயங்களும், திருச்சுற்று மாளிகையில் அட்டதிக்குப் பைரவர் சிலைகளும் உள்ளன. கோயிலின் உள் வடபால் 64 நாயன்மார்களுக்குச் சிலைகள் உள்ளன. அவற்றிடைப் பளிங்குக் கல்லாலான புத்தர் சிலை ஒன்றும் காணப்படுகிறது. கோயிலை ஒட்டி நகரம் அமைப்பது பெரும்பாலும் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில்தான்.[56] இக்கோயிலைச் சுற்றி மக்கள் குடிஇருந்ததைக் குலொத்துங்கன் கல்வெட்டு ஒன்று குறிக்கிறது,

(54) ஆறகளூர் காமநாதர் கோவை, செய் 203 284.
(55) ''ஆறகளூர் காமநாதர் கோவை''
அடிகளாசிரியன் பதிப்பு. 1947.
(56) S. R. பாலசுப்ரமணியம், 'சோழர் கலைப் பாணி-] பக். 170

தேவிக்குத் தனிக்கோயில் காணப்படுகிறது, தேவியைப் பெரியநாயகி அம்மை என்றும், பெரியம்மை என்றும் வழங்குவர். இக்கோயில் விருச்சம், *மகிழமரம்*, என்றும், *மாமரம்* என்றும் இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. தற்போது இவ்விரண்டு மரங்களும் கோயிலில் காணப்படுகின்றன.

*படிமங்கள் :*

இக்கோயிலில் கவின்மிக்க 90-க்கும் மேற்பட்ட செப்புத் திருமேனிகள் காணப்படுகின்றன. இச் செப்புத் திருமேனிகளுள் புத்தர் சிலை, மோகினி பாவையார், நாயன்மார், பைரவர், சட்டநாதர், பிச்சாடனர், முதலியன கவின்பெறச் செய்யப்பட்டுள்ளன. இச் செப்புத் திருமேனிகள், எவரால் எப்போது கொடுக்கப்பட்டன என்பதற்குப் போதிய ஆதாரம் கிடைக்கவில்லை.

*கல்வெட்டுக்கள் :*

இக்கோயிலில் இருந்து கி. பி. 1913-இல் 27 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. சோழர்காலம்: 14. பாண்டியர்காலம் : 5. நாயக்கர் காலம் : 13. கல்வெட்டுக்கள் கூறும் செய்திகளையும் காலத்தையும் சுருங்கக் காண்போம்.

*மூன்றாம் குலோத்துங்கன் :*

இவனது 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் இரண்டு, மண்டபத்தின் வடக்குச்சுவரில் காணப்படுகின்றன. *இராசராசதேவன் பொன்பரப்பினான் குலோத்துங்க சோழ வாணகோவரையனும், கீழையூர் மலையமானும்* செய்துகொண்ட உடன்படிக்கை, தங்கள் பாதுகாப்பில் உள்ள நாட்டெல்லையை வரையறுத்துக்கொண்டு தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வதில்லை என்றும்,

பகைவர்களை நாட்டில் நுழையவிடாமல், அரசனுக்கு உறு துணையாக இருக்கவேண்டும் என்றும் கூறுகிறது.[57] மற்றொன்று (1) அம்மையப்பன், அழகிய சோழன் எதிரிலி சோழச்சம்புவராயன் (2) குலோத்துங்க சோழ வாணகோ வரையன், (3) மைத்துனன், காடவராயன் ஆகிய மூவரும் தங்களுக்குள் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டார்கள் என்றும் குலோத்துங்கனுக்கு உறுதுணையாக இருந்து பகைவர்களை முறியடிக்கவேண்டும் என்றும் குறிக்கிறது.[58] இவ்விரு கல்வெட்டுக்களாலும் (1) குலோத்துங்க சோழ வாணகோவரையன் (2) மலையமான், (3) சம்புராயன், (4) காடவராயன் என்ற நான்கு தலைவர்களைப்பற்றி அறிகிறோம்.

*கிளியூர் மலையமான் :*

இவன் நம் குலோத்துங்கனின் படைத்தலைவர்களுள் ஒருவன், மலையமான் மரபினன். இவன் அரசன்பால் அன்பு கொண்டு விளங்கியமை பல கல்வெட்டுக்களால் அறிய முடிகிறது.

*குலோத்துங்க சோழ வாணகோவரையன் :*

இவனும் ஒரு அரசியல் அதிகாரியே இவன் கல்வெட்டுக்கள் திருச்சி, சேலம் மாவட்டங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவன் தெடாவூர்க் கோயிலுக்கு நிலம் வழங்கிய செய்தியை இவ்வூர்க் கல்வெட்டு ஒன்று குறிக்கிறது.

*சம்புராயன் :*

இவனைச் செங்கேணி அம்மையப்பன் அழகிய சோழன் என்றும் எதிரிலி சோழன் என்றும் கல்வெட்டுக்கள் குறிக்

(57) 440 of 1913.
(58) 435 of 1913.

கின்றன. நம் குலோத்துங்கன் ஆட்சிக்காலத்தில் இவன் மகன் எதிரிலி சோழக் காடவராயனின் கல்வெட்டுக் களுக்கும் கிடைக்கின்றன அந்நாட்களில் சம்புராயன், கடம்பராயன் என்ற இரு பட்டங்களையுடையவராயிருந் தமை அறியற்பாலது,

*காடவராயர் :*

கோப்பெருஞ்சிங்கன் என்று பெயர்கொண்ட பல்லவர் குலத்தலைவன். இவன் சோழனுக்குத் துணையாகப் பாண்டிப்போரில் வென்றதால் நம் குலோத்துங்கன் தன் மகளை இவனுக்கு மனம் செய்து கொடுத்தான்.[59] 15-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று இவ்வூர்ச் சபையார், இலத்திப்பாடி என்ற ஊரை மலையன் உடையான் என் பானிடம் 135 பொன் கொடுத்து வாங்கி இக்கோயிலுக்கு வழங்கிய செய்தியைக் குறிக்கிறது.[60] 29-ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1206) இக்கோயில் எழுந் தருளியுள்ள எம் பெருமக்களை (அப்பர், சுந்தரர், சம்பந் தர்) பராமரிக்க 5,000 காசுகள் கொடுத்த செய்தியைக் கூறுகிறது.[61] 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, ஆலம்பாக்கம் என்ற ஊரை இக்கோயிலுக்கு எழுதி வைத்த செய்தியைப் பற்றியது, இக்கல்வெட்டு மூன்றும் குலோத் துங்கனுடையதென்பதை இரத்தினகிரிக் கல்வெட்டு உறுதி செய்கிறது.[62]

*மூன்றும் இராசராசசோழன் : (கி. பி. 1216-1256) :*

இவன் கல்வெட்டுக்கள் மூன்று கிடைக்கின்றன 4-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுப்படி (கி. பி 1220)

(59) S. I. I. Vol XII P. 10. Introduction.
(60) 416. of 1913.
(61) 418 of 1913.
(62) 81 of 1913.

நரித்தலை நாவலூர் (நாவலூர்) என்ற கிராமத்தை இக்கோயிலுக்கு வழங்கினான்.[63] 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1230) இக்கோயில் நாள் வழிபாட்டுக்கு விளக்கெரிக்கவும், பராமரிக்கவும் நாச்சியார் 15,000 காசுகள் வழங்கிய செய்தியைக் குறிக்கும்.[64] 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும், இதே பெண் கொடுத்த கொடையைப் பற்றி யது.[65] நுழை வாயிலை ஒட்டி வலதுபுறம், உள்ள ஒரு கல்வெட்டு, இக்கோயிலுக்கு 8 விளக்குகள் எரிக்க 2000 காசுகளும் 49 பசுக்களும் வழங்கிய செய்தியைக் கூறும். இதில் குறிக்கப்பட்ட ஆட்சியாண்டு அழிந்துவிட்டது.

*சுந்தரபாண்டியன்* (கி. பி. 1251-1271) :

இவனுடைய 10-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1261) பொன்பரப்பி ராசநாராயண நல்லூரில் அரை வேலி நிலம் இக்கோயிலுக்கு தேவதானமாக வழங்கப்பட்டதைக் கூறுகிறது. இத்தானத்தை ஆதித்தன் கணபதி ஆள்வான் ஒப்பிட்டு வழங்கியுள்ளான்.[66] மற்றொன்றில் ஆற்றூரில் 4 வேலி நஞ்செய் நிலம் வழங்கப்பட்ட செய்தியும்; 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் (கி.பி. 1264) தேவியாகுறிச்சி என்ற கிராமத்தில் 3,000 குழி நிலமும் இக்கோயில் பராமரிப்புக்காக வழங்கப்பட்ட செய்தியும் காணப்படுகின்றன[67] மற்றொன்று பாண்டியன் தன் 10-ஆம் ஆட்சியாண்டில் கோயில் ஆணையாளர் விடுத்த ஆணையைப் பற்றியது. இம்மூன்று கல்வெட்டுக்களிலும் கணபதி ஆள்வான் என்ற பெயர் குறிக்கப்படுகிறது இவன் முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியனுக்குக் கீழ் இருந்த ஒரு அரசியல் தலைவன். இவன் கப்பலூரைச் சேர்ந்தவன்.

(63) 415 of 1913.
(64) 415 of 1913. (65) 437 of 1913.
(66) 444 of 1923 (67) 441 of 1913.

6-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று குலசேகர பாண்டியன் மனச்சாந்திக்காகப் பெரியேரியை ஒட்டிய 3,000 குழி நன்செய் நிலத்தைக் கொடுக்கக் கணபதி ஆள்வான் ஏற்று இக்கோயிலுக்கு வழங்கியதைக் கூறும்.[68] 15-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சேதிராயன என்பான் இக்கோயிலுக்கு ஓதுவார் இருவருக்கு 1000 குழி நிலம் வழங்கிய செய்தியைப்பற்றியது.[69] 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1263) பாண்டியர் காலக் கோயில் நடைமுறையைத் தெளிவிக்கிறது. மாதத்தில் $3\frac{1}{8}$ நாட்கள் வழிபாடு நடத்தும் உரிமை ஒரு பெண்ணுக்கு இருந்தது. அப்போது கோயிலுக்கு உரிமையான நகைகள், சிலவற்றைப் பொய்க்கணக்குக் காட்டி விற்றுவிட்டாள். இதை அறிந்த கோயில் அதிகாரிகள் அவளைக் கைதுசெய்து மகேசுவரன் பொது மண்டபத்தில் நிறுத்தி விசாரித்தனர், மேலும் 250 பணத்தை (25,000 சோழியக்காசு) ஏனை உறுப்பினர்களுக்குத் தண்டமாகச் செலுத்துமாறு ஆணையிட்டதையும் அவளுக்கு உரிய உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்ட செய்தியையும் கூறுகிறது.[70]

*மூன்றும் சடையவர்மன் சுந்தரபாண்டியன்*
**(கி. பி. 1276-1293) :**

கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட இவனது 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் கோயில் நடைமுறையில் மக்களுக்கு உரிய பங்கைப்பற்றி விரிவாகப் பேசுகிறது. ஆறகழூர் செக்கார்க்கும் [oil merchants] செட்டியார்களுக்கும் கோயில் பொறுப்பின் தலைமைக்காக நடந்த தகராறில் கோயில் நடைமுறை செக்கார்க்கு

(68) 426. of 1913.
(69) 419 of 1913.
(70) 439 of 1913.

ஒப்படைக்கப்பட்டது. சில ஆண்டுகளில் கோயில் நிர்வாகம் சீர்குலையவே இவ்வூர் மக்கள் சேர்ந்து தளவாய் என்ற ஊரை இக்கோயிலுக்கு எழுதிவைத்து அதன் வருவாயைக்கொண்டு கோயிலைப் பராமரித்தனர். இச்செய்தி கோயிலின் வடக்குச் சுவரில் உண்டு.

*நாயக்கர் காலம்: ஒய்சளப்பேரரசு :*

மைசூரைத் தன்னகத்தடக்கிய துங்கபத்திரையாற்றுக்குத் தென்பாற்பட்ட நிலப்பகுதியை ஆண்டுவந்த சளனை முதல்வனாகக்கொண்டு தோன்றிய பேரரசு ஒய்சளப்பேரரசு என்பர்.

வீர இராமநாதன் என்பான் பத்தாவது அரசன். இவன் கி.பி. 1254 முதல் 1295 வரை ஆண்டவன். இவன் காலக் கல்வெட்டுக்கள் கொங்குநாட்டில் இல்லை என்பர்.[71] எனினும் இவனுடைய 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. இராமநாத தேவனால் இராகுத்த ராயனுக்கு கொடுக்கப்பட்ட சேலநாட்டு நாட்டாமங்கலம் என்ற கிராமத்தை இராகுத்தராயன தேவதானமாக இக்கோயிலுக்கு எழுதிவைத்தான்.[72]

*சங்கமமரபு :*

முதலாம் அரிகரன் முதல் இரண்டாம் விருப்பாட்சின் வரை உள்ள பன்னிருவரை சங்கமமரபு மன்னராகக் கொள்வர். முதலாம் புக்கனின் மகன் கம்பண்ணனின் கல்வெட்டு ஒன்று (கி. பி. 1376) உருத்திரன், மகேசுவரன், கோயில் கணக்கர், ஆகியோர் கூடி எண்ணேதய நாயனார்க்கு மேலாளர் பதவியும், குடியிருப்பு வீடும் கொடுத்த செய்தியைக் கூறுகிறது.[73] இரண்டாம் அரிகரனின்

---

(71) புலவர் குழந்தை, 'கொங்குநாடு' பக். 442.
(72) 414 of 1913.
(73) 431 of 1913.

மகனான முதல் விருப்பாட்சனின் ஆட்சிக்காலக்கல்வெட்டு ஒன்று மூன்று புரோகிதர்களின் அர்ச்சக உரிமையை விற்கத் திருவளஞ்சிரம் கோயில் குருக்களுக்கு உரிமை உண்டு என்பதைக் கூறுகிறது [74]

*சாளுவ மரபு :* *இரண்டாம் நாசிம்மனின்* (கி. பி. 1491-1505) ஆட்சிக்காலக் கல்வெட்டுகள் இரண்டு காணப்படுகின்றன. ஒன்று, கி. பி. 1504-ல் பக்கம்பாடி என்ற கிராமத்தின் மீது விதிக்கப்பட்டிருந்த வரியை நீக்கி வருமானம் முழுவதையும் கோயில் உடைமையாக்கினான் என்றும்; மற்றொன்று கி.பி. 1506–இல் ஆத்தூர், முல்லைப் பாற்று நாட்டார் கூடித் துளுக்கண்ண நாயக்கனின் உடல்நலம் தேற இக்கோயிலில் விளக்கெரிக்க எண்ணெய் வழங்கிய செய்தியையும் கூறுகின்றன.

*வசந்தராயன்* (1505-1509):

இவன் ஆட்சிக்காலக் கல்வெட்டு ஒன்று, எரமாஞ்சி திம்மைய்ய நாய்க்கன் மகன் துளுக்கண்ண நாயக்கன் இக்கோயிலுக்குத் தேர் வழங்கிய செய்தியைக் கூறுகிறது.[75]

*கிருட்டினதேவராயர் :* (கி.பி. 1509-30)

இவருடைய கல்வெட்டுக்கள் மூன்று கிடைக்கின்றன. ஒன்று கி. பி. 1509-இல் பட்டம்தாங்கி நிகழ்ச்சிக்கு ஒரு ஆள் நியமித்த செய்தியையும், மற்றொன்று கி பி.1514இல் பனந்தலை என்ற அழிந்துபட்ட கிராமத்தைப் புதுப்பித்து இம்மாடி துளுக்கண்ண நாயக்கன்பேட்டை (துளுக்கனூர்) என்று பெயரிட்டு வரிவாங்கும் உரிமையை இக்கோயிலுக்கு அளித்த செய்தியையும் கூறுகின்றன.[76]

---

(74) 430 of 1913.
(75) 430 of 1913. (76) 409 of 1913.

மூன்றாவது கல்வெட்டு, கி பி 1515-இல் அக்கிதிப்மைய நாய்க்கனும், கோயில் சபையாரும், 250 குழி நிலத்தை ஊர்மைக்காரனுக்கு வழங்கிய செய்தியைக் குறிக்கும்.[77] மூன்றாம் குலோத்துங்கனின் 13-ஆம் ஆட்சியாண்டு துவங்கி நாயக்கர் ஆட்சி ஈறாகச் சுமார் 330 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட வரலாற்றை விளக்கும் இக்கோயில் கல்வெட்டுக்களைப்பற்றிக் கண்டோம். அடுத்து தொடாவூர் ஏகாம்பரநாதர் கோயில் வரலாற்றைச் சுருங்கக் காண்போம்.

## 7. தொடாவூர்: ஏகாம்பரநாதர்:

தொடாவூர் ஆத்தூருக்குத் தெற்கே 9 கல் தொலைவில் பெரம்பலூர் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஒரு கிராமம். மூன்றாம் குலோத்துங்கன் காலக் கல்வெட்டு இவ்வூரை மிலாடு என்கிற ஜனநாத வளநாட்டில் ஆற்றூர்க் கூற்றத்தில் உள்ள மேல் கங்கபாடி என்னும் தொடாவூர், எனக் குறிக்கிறது.[78]

சுவேத நதியின் தென்கரையில் அமைந்துள்ள இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் ஏகாம்பரநாதர் என வழங்கப்படுகிறான். இவ்வூர் சுவேத நதிக்கரையில் அமைந்துள்ளதால் தடவூர் > திடவூர் > திடாவூர் (தடம் = கரை) என வழங்கப்பட்டிருக்கலாம் தற்போது, திடாவூர், தொடாவூர் என்று இரு பெயராலும் வழங்கப்படுகிறது. இக்கோயிலை ஒட்டிய ஏரியில் பல முதுமக்கள் தாழிகளும், சோழர்கால நாணயங்களும், கிடைத்துள்ளன. இன்று இவ்வூரில் பத்திற்கு மேற்பட்ட நிறைகல் தெற்றிகளைக் காணலாம்.

(77) 428 of 1913. (78) 458 of 1913

கோயிலின் அமைப்பு :

தற்போது பாழடைந்து காணப்படும் இக்கோயில் சுவேத நதியின் தென்கரையில் கிழக்கு முகம நோக்கி கட்டப்பட்டுள்ளது. உமைக்கு தென்முகம் நோக்கிய ஒரு கற்கோயில் உண்டு. கோயிலைச் சுற்றிலும் பரிவார தேவதைகளுக்குத் தனிக்கோயில்கள் காணப்படுகின்றன. மூன்ரும் குலோத்துங்கனின் 27-ஆம் ஆட்சியாண்டில் இக் கோயில் கற்றளியாக மாற்றப்பட்டுள்ளது [79] கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், ஆகியன காலத்தால் முற்பட்டவை. தற்போது மகாமண்டபம் இல்லை. எனினும் இருந்ததிற்கான தடையங்கள் காணப்படுகின்றன. உமை கோயிலில் கல்வெட்டுக்கள் இல்லை, இவ்வுமை கோயிலின் முன் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள தூண்களில் குலோத்துங்கனும், அவன் தேவியும், இறைவியை வணங் குவதைப் போன்று சிற்பம் காணப்படுதலான், இவ்வுமை கோயில் மூன்ரும் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்ட தாகலாம். இக்கோயிலின் புறச்சுவரில் வேலைப்பாடு மிக்க ஒரு பெண் சிற்பம் உள்ளது. இது திருமகளின் சிலையாகத் தோன்றுவதாகக் கூறுவர். [80]

கல்வெட்டுக்கள்।

இக்கோயிலில் இருந்து 9 கல்வெட்டுக்கள் படியெடுக் கப்பட்டுள்ளன. இவற்றுள் ஐந்து கல் வெட்டுக்களுக்கு அரசன் யார் என்று தெரியவில்லை. [81] கிடைத்துள்ள அகச் சான்றுகளைக் கொண்டு இக்கல்வெட்டுகள் கூறும் செய்தி கள், அரசன், காலம் பற்றி ஆய்வோம்.

---

(70) I.M.P Vol. II P. 1208.
(80) இக்கருத்தை திரு. நாகசாமி அவர்கள் கூறினர்.
இயக்குநர், த, தொ. ஆ. துறை.
(81) 455, 459, 460, 463, 464, of 1913.

*மூன்றும் குலோத்துங்கன்:*

இக்கோயிலின் தென் சுவரில் மூன்றும் குலோத்துங்-கனின் 27 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, *திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் பாண்டியன் முடித்தலைக் கொண்ட குலோத்துங்க சோழ தேவன்,* இக்கோயிலை கற்றளியாக மாற்றினுன் என்றும் இதற்கு ஆகுபசெலவை, இக்கோயில் நிதியைக் கொண்டும் இளைய நம்பிராட்டி யாரின் கொடையைக் கொண்டும் ஈடுசெய்து கட்டி முடித் தான் என்றும் குறிக்கிறது.[82]

இளைய நம்பிராட்டியைப் பற்றிக் குறிப்பு காணப்படு வதால் குலோத்துங்கனுக்குப் புவனமுடையாளே அன்றி *இளைய நம்பிராட்டி* என்றதொரு தேவியும் இருந்தாள் என்பது தேற்றம். 10ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1188) திருவேகம்பம் உடைய நாயனு (சிவன) குன்றமெறிந்த பெருமாள் (முருகன்) கோயிற்களைப் புதுப் பிக்க *விஜய ராஜேந்திர சோழ தேவன்* கொடுத்த நிலத் தானம பற்றியது.[83] இக் கல்வெட்டுக் குறிக்கும் அரசன் மூன்றும் குலோத்துங்கனே என்று ஆண்டு அறிக்கை தெளிவாக்குகிறது. 5ஆம் ஆண்டுயாண்டுக் கல்வெட்டு இக் கோயிலைப் புதுப்பிக்கவும், வழிபாடு செய்யவும, மேல் கங்கபாடியில் (தெடாவூர்) உள்ள நிலத்தைக் குலோத் துங்க வாணகோ வரையன் வழங்கினுன் என்று கூறு கிறது.[84] இவன் குலோத்துங்கனின் அரசியல் அதிகாரி.[85] இவனைப் பற்றிய கல்வெட்டுகள் திருச்சி[86] தஞ்சாவூர்[87] போன்ற ஊர்களில் காணக் கிடைக்கின்றன. மேற்கண்ட

(82) 458 of 1913.
(83) 457 of 1913. (84) 461 of 1913.
(85) *சதாசிவபண்டாரத்தார், 'பிற்காலச் சோழர் வரலாறு'* Vol. II.
(86) 521 of 1912. (87) 166 of 1908.

கல்வெட்டையொட்டிக் குலோத்துங்கனின் 9ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் குலோத்துங்க சோழ வாணகோவரையன் கொடுத்த நிலத்தானம் பற்றியே குறிப்பிடுகிறது 20 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி. பி. 1210) வாணகோ வரையன் (மகதைப் பெருமாள்) என்ற சிற்றரசன் ஆவணி 27ஆம் நாள் தெடாவூரில் 500 குழி நிலத்தைக காணியாகப் பெருங்களப்பரையன் பக்கம் அழகியான என்பவனுக்கு வழங்கிய செய்தியைக் குறிக்கிறது.

மேற்கண்ட கல்வெட்டை யொட்டித் தயாளு நல்ல பெருமாள், விளுப்பாத ராயன் என்போர் புத்தூர் என்ற கிராமத்தை இக்கோயில் புறவரியனுக்கு (வில்லாதி ராயன்) வழங்கிய செய்தியை ஒரு கல்வெட்டுக் கூறும்[88] வாணகோ வரையனைப் போனறே தயாளு நல்ல பெருமாள், விளுப்பாத ராயன் என்போரும நம குலோததுங கனின் அரசியல் அதிகாரிகள் ஆவா. கோமுகத்திற்குக் கீழ்ப்பாவப்பட்டுள்ள ஒரு கல்லில கூத்தாண்டான் என வன கோமுகததை அமைத்த செய்தியைக் கூறுகிறது[89] இத்தொட்டி, கோயில் கற்றளியாக மாற்றப்பட்டபோது கட்டபட்டதாகக் கொண்டால், கி. பி. 1205-இல் அமைக கப்பட்டதென்று கூறலாம்.

*சுந்தர பாண்டியன் :*

இக்கோயிலின் வடபால் 7-ஆம் ஆட்சியாண்டு (அரசன் பெயர் இல்லை) கல்வெட்டு கணபதி ஆள்வான் கப்பலூர் வாணதிராயன் ஒரு நிலத்தை இக்கோயிலுக்கு எழுதி வைததான எனக் கூறுகிறது.[90] இவன் முதல்

(88) 463. of 1913.
(89) 464 of 1913.
(90) 459 of 1913.

சடையவர்மன் சுந்தரபாண்டியனின் அரசியல் அதிகாரி என ஆறகழூர் கல்வெட்டுப்பகுதியில் கண்டோம். (பக். 96)

இக்கோயிலில் கிடைத்த ஒன்பது கல்வெட்டுகளில் எட்டு கல்வெட்டுகள் மூன்றும் குலோத்துங்கன் காலத்தவை என்பதும், ஒன்று சுந்தர பாண்டியன் கல்வெட்டு என்றும் கண்டோம். நம் குலோத்துங்கனுக்கு இளைய நம்பிராட்டி என்ற ஒரு பட்டத்தரசியிருந்தாள் என்றும், குலோத்துங்கனுக்கு விசய இராசேந்திர சோழன் என்ற ஒரு பெயர் வழங்கப்பட்டதென்றும் தேடாவூர் கல்வெட்டுக்கள் வழி அறிந்தோம்.

8. நைனாமலை: வரதராசப் பெருமாள்:

நாமக்கல்லுக்கு 10 கல் வட கிழக்கில் அமைந்துள்ள இவ்வூரை நைனமலை என்றும் நயனமலை என்றும் புராணங்கள் குறிக்கின்றன இவ்வூரில் உள்ள மலையில் எழுந்தருளியுள்ள பெருமாள் வரதராசப் பெருமாள் என அழைக்கப்படுகிறார். கோயில் தலைக் கோபுரத்தைக் கடந்து சென்றால் வரதராசர் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருப்பதைக் காணலாம். மகா மண்டபத்திலுள்ள துவார பாலகர்கள் சிலைகள் இரு வேறு அமைப்புடையன. மண்டபத் தூண்களில் ஆஞ்சநேயர், நரசிம்மர், கருடாழ்வார், இராமன் போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன. இம்மண்டபத்தில் பல வேலைப்பாடுகள் மிக்க சிலைகள் வைத்துள்ளனர்.

தேவக் கோட்டங்களில் பன்னிரு ஆழ்வார்கள் உருவமும், தென் பிரகாரத்தில் கிழக்கு நோக்கிக்குவலயவல்லித் தாயின் சந்நிதியுமுண்டு.

தல புராணம்:

இக்கோயிற்றல புராணம், இம்மலைக்குப் பண்டு

வேதாசலம் என்று பெயர் இருந்ததையும், கிருத யுகத்தில் மகாலட்சுமி, விட்ணுவை வழிபட்டதால் பத்மாசலம் என்றும், கிரேதா யுகத்தில் தேவேந்திரன் வழிபட்டதால் இந்திராசலம் என்றும், துலாபரயுகத்தில் யாதவர் கண்ணனுடன் வழிபட்டதால் யாதவாசலம் என்றும், கலியுகத்தில் நயன மகரிசி வழிபட்டதால் நயனமலை என்றும் பெயர் பெற்றதென்பதையும் குறிக்கிறது [91] இம்மலையில் பத்ம தீர்த்தத்தைத் தவிர அராமத் தீர்த்தம், பாண்டவர் தீர்த்தம் என்று பல தீர்த்தங்கள் உண்டு.

இக்கோயிலில் சோழன் பரகேசரி வர்மனின் 6-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இக்கோயிலுக்கு விளக்கெரிக்கப் பராந்தகன் கொங்கொறிந்த கைக்கோளனான புருசோத்தமன் கொடுத்த பொன்னைப் பற்றிக் குறிக்கிறது.[92]

(91) பரணீதரன், 'புனிதப்பயணம்' ஆனந்தவிகடன் 2-7-72 பக் 88

(92) 309 of 1215



# 5. நாயக்கர்காலக் கோயில்கள்

[பொது அமைப்பு: (1) தம்மம்பட்டி: கதிலி நரசிம்மப் பெருமாள்
(2) கபிலமலை: முருகன்]

**பொது அமைப்பு:**

நாயக்கர் காலத்தில் பல நிலைக்கோபுரங்கள் நூறு கால், ஆயிரங் கால் மண்டபங்கள் போன்ற பல புதிய அமைப்புகள் தோன்றின. எனினும் இம்மாவட்டக் கோயில்களில் ஏனோ இவ்வமைப்புக்கள் அருகியே காணப்படுகின்றன. இதற்குக்காரணம், சேலம் மாவட்டம், நாயக்க மன்னரின் நேரடி ஆட்சிக்குக்கீழ் இல்லாமல் பாளையக் காரர்களின் கீழ் இருந்தமையே யாகும். இவர்களால் பல கோயில் திருப்பணிகள் செய்யப்பட்டன. நாமக்கல் சங்ககிரி, வேலூர், ஆத்தூர், தர்மபுரி, தம்மம்பட்டி போன்ற ஊர்களில் பல கோட்டைகள் கட்டப்பட்டன. சேந்தமங்கலம், ஆறகழூர், ஆத்தூர், தம்மம்பட்டி போன்ற ஊர்களில் பெருமாள் கோயில்கள் கட்டப்பட்டன. தாரமங்கலம, பேளூர் கோயில்களில் உள்ள வேலைப்பாடுகள் மிக்க சிற்பத் தூண் மண்டபங்கள் இவர்களால் இயற்றப்பட்டவை இவர்கள் பல கோயில்களில் நித்திய நைவேந்தியங்களுக்குத் தேவையான மானியங்கள் பல விடப்பட்டன இவர்கள் காலத்தில் வைசியர்களால், கன்னிகாபரமேஸ்வரி என்ற பெயரிலும், தட்டாரால் காமாட்சி என்ற பெயரிலும் பல கோயில்கள் எழுப்பப்பட்டன.

கல்வெட்டுக்கள் :

நாயக்கர் காலக் கல்வெட்டுக்கள் பெரும்பாலும் 'ஸ்ரீமன் மகா மண்டலேசுவர' என்று துவங்குகின்றன. எழுத்துக்கள் பிழை பட எழுதப்பட்டன. சமக்கிருதச் சொற்களை எழுதக் கிரந்த எழுத்துக்கள் பயன்பட்டன. சோழர் காலக்கல்வெட்டுக்களைப் போல் மன்னனின் ஆட்சி யாண்டு இல்லை. சக ஆண்டும், இணையான தமிழ் ஆண்டும், சில கல் வெட்டுக்களில் கலியாண்டும் காணப்படுகின்றன. மேலும், மாதம், நாள், திதி, நட்சத்திரம் போன்ற கோள் நிலைக் குறிப்புக்களைக் கொண்டுள்ளன. இவர்கள் கல் வெட்டுக்கள் பெரும்பாலும் அரசனும் குடி மக்களும் கோயிலுக்கு. கொடையாகநிலம் பொன், நந்தா விளக்கு போன்றவை அளித்ததைக் குறிப்பதாகவே உள்ளன. சில கல்வெட்டுக்கள் தளவாய், நாயக்கர், சேர்வை போன்ற அதிகாரிகளும், சீர்மை, பற்று இராட்டிரம் போன்ற நாட்டுப்பிரிவுக்களும் குறிக்கப் படுகின்றன. நாயக்கர் காலத்தைச்சேர்ந்த தம்மம்பட்டி கதிலி நரசிம்மப் பெருமாள் கோயில், கபிலமலை முருகன் கோயில் ஆகியன இனிக்காண்போம்.

தம்மம்பட்டி கதிலி நரசிம்மப் பெருமாள்:

தம்மம்பட்டி சேலம் மாவட்டத்தில் சேலத்திற்குப் பதினெட்டு கல் தெற்கிலும், செந்தாரப்பட்டிக்கு இரண்டு கல் மேற்கிலும் திருச்சி நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஒரு ஊர். இவ்வூரின் பழைய பெயர் தேவமறி எனக் கல் வெட்டுக்கள் கூறுகின்றன.[1] இவ்வூர் மலாடு ஜனநாதி வளநாட்டில் ஆற்றூர் கூற்றத்தில் உள்ளதெனப் பழஞ் சுவடிகளும் கல்வெட்டுக்களும் நவில்கின்றன, இவ்வூர்ப் பெருமாள் கோயிலைக் கட்டியவன் முதல் தேவராயன்

(1) 4 of 1930.

எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[2] தேவறி என்ற ஊர்ப்பெயரும் இவனுல் ஏற்பட்டதாகலாம். ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திற்குப்பிறகு தம்மம்பட்டி என அலழக்கப் பட்டது. இவ்வூரில் வாழ்ந்த தம்மண்ண செட்டி என்பவரால் தம்மண்ணஞ் செட்டியூர் என வழங்கிப்பின் தம்மண்ணம்பட்டி, தம்மம்பட்டி என மருவிற்று என மரபு வழிக்கதைகள் குறிக்கின்றன.

சங்ககாலத்தின் இப்பகுதியை விச்சிக்கோ என்பான் குரும்பூரை (குறும்பலூர்) தலைநகராகக் கொண்டு ஆண்டான் என அறிகிருேம்.[3] அடுத்துக் கங்கன் வழி வந்த கட்டிமரபினர் துவங்கி, இளமன்கட்டி, வேம்பன்கட்டி, சியாளிகட்டி, போன்ருேர் ஆண்டுவந்தனர். 13-ம் நூற்ருண்டின் முற்பகுதியில் சோழர் ஆட்சியும், பின் நாயக்கர் ஆட்சியும் நிலவிற்று.

*கோயில்:*

இவ்வூரின் கீழ்ப்பால் ஒரு பெருமாள் கோயில் உண்டு. சுமார் அரை மைல் சுற்றளவுள்ள இக்கோயில் (1) மூலத் தானம், (2) அர்த்தமண்டபம், (3) மகாமண்டபம், என்ற அமைப்புகளைக் கொண்டது. கோபுரம் இல்லாத முன் வாயிலைக் கடந்து உள்ளே சென்ருல் மகா மண்டபத்தை யடைவோம். கோயிலின் உள்ளே வடபால் வைணவ ஆழ்வார்கள், கம்பீரமாகக் காட்சிதருகின்றனர். அர்த்த மண்டபத் தூண்களில் ஆஞ்சனேயர், விட்ணு, நரசிம்மர், பைரவர் முதலியோர் சிற்பங்கள் அணிசெய்கின்றன.

இறைவனை மூலதானத்தில் அமர்ந்த கோலத்திலும் இலட்சுமி அவர்மடிமீது இருக்கும் கோலத்திலும் காண லாம். கோயிலின் தென்பால் 'செங்கமலத்தாயார்'

(2) 2 of 1930.

(3) குறுந்தொகை: 328.

கோயில் உண்டு. அக்கோயில் முகட்டில் உள்ள ஒரு கல்வெட்டு "கி. பி. 1905 இல் முடக்குப்பட்டி நாராயணன் உபயம்" எனக் குறிப்பதால், 70 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதென்பது தேற்றம். கருவறையை ஒட்டி மேற்கில் இராமன் கோயில் காணப்படுகிறது. இதையொட்டி ஆண்டாள் கோயில் ஒன்றும்; இச் சன்னதிக்கு நேர் கிழக்கில் விளரேவசனரும் இதையொட்டி, புல்தரையில் வேலைப்பாடுமிக்க பைரவர், தேவியர் சிலைகளும், காணப்படுகின்றன.

இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனைக் கதிலி நரசிம்மப் பெருமாள் என அழைப்பர். இக்கோயிலை உள் அடக்கிய ஒரு கோட்டை இருந்ததாகத் தெரிகிறது, இக் கோட்டை 1918 வரை இருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன என்பர்.[4] கோட்டை இருந்த இடத்தில் தற்போது ஒரு முனியப்பன் கோயில் மட்டுமே எஞ்சியுள்ளது. இக்கோயிலில் இருந்து நான்கு கல்வெட்டுக்கள், படியெடுக்கப்படடுள்ளன,

*சாளுவமரபு:*

கோயில் கருவறையின் வடக்குச் சுவரில் உள்ள ஒரு கல்வெடடு. (தேவராயமகாராயன் காலத்தது) சக ஆண்டு 1290, விசுவாசு-சு, 5 திங்கள்கிழமை *பாசுவசங்கரகுட்டி ஆண்டியம்பர கண்ட மகாராயன சங்கர, வாசுதேவ நாயக்கர்* இக்கோயிலைக்கட்டியதாகக் கூறுகிறது இக் கல்வெட்டுக்குறிக்கும் அரசன் முதலாம் தேவராயன். எனின் முதலாம் தேவராயனின் ஆட்சிக்காலம் கி. பி 1406-1422 எனச்சிங்கு நல்லூர்க் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.[5] தம்மம்பட்டிக் கல்வெட்டுக் கூற்றுப்படி

(4) S. D. G. P, 304
(5) 19 of 1910

சக, 1290 என்பது கி பி. 1368 ஆண்டைக் குறிக்கும். இக்காலம் குமாரகம்பண்ணன் காலம். இக்கல்வெட்டில் ஆண்டு தவருக குறிக்கப்பட்டுள்ளது.[6] சக 1290 என்பது சக 1329 எனக் கொண்டால் முதலாம் தேவராயன் ஆட்சிக்கு வந்த மறு ஆண்டு கி. பி. 1407 கட்டப்பட்ட தென்று கொள்ளலாம்.

*துளுவமரபு: இரண்டாம் நரசிம்மன்* (கி.பி. 1486-1491): மேற்கண்ட கல்வெட்டு, சக 140 (9) பிலவங்க சு, 11. (கி. பி 1488) மாராடிசீர்வை புதுதிப் பருகூர், அருளம் பள்ளி, என்ற இரண்டு கிராமங்களை *ஏரமாஞ்சி* துளுக் கண்ண நாயக்கன் இக்கோயிலுக்கு கொடையாக வழங்கினுன், என்று கூறுகிறது. சக 1409 ஆம் ஆண்டு என்பது கி. பி. 1488, இவனைப்பற்றி ஆறகழூரில் உள்ள ஒரு கல்வெட்டு இரண்டாம் நரசிம்மனுல் பக்கம்பாடி என்ற கிராமத்திற்கு விதிக்கப்பட்ட வரியைத் தடுத்து வருவாய் முழுவதையும் கோயில் உடைமையாக்கினுன் எனக்கூறுகிறது.[7] இரண்டாம் நரசிம்மன் பெயரளவில் தான் பேரரசனுக இருந்தான். ஆனுல் மகத மண்டலத் தைத் துளுக்கண்ண நாயக்கனே முழு உரிமை பெற்று ஆண்டான என அறிகிரேும்.

*வசந்தராயன் (கி. பி. 1505-1509)*: கருவறையின் தென் சுவரில் வசந்தராயன் காலக் கல்வெட்டு ஒன்று சக. 1528, துலா சு. 3. ஞாயிற்றுக்கிழமை (கி. பி. 1507) *ஏரமாஞ்சி சிக்கைய திம்மைய நாயக்கன்* இவ்வூரில் வேளாண் பொருட்களுக்கு வரி வாங்கும் உரிமையை இக் கோயிலுக்கு எழுதிவைத்தான். எனக்குறிக்கிறது.

---

(6) 1913 ஆம் ஆண்டு கல்வெட்டு அறிக்கையும் இக் கூற்றைத் தெளிவாக்கும்.

(7) 408 of 1913.

கி. பி. 1505-ஆம் ஆண்டுக்குப்பிறகு இவ்வூர் 1509 வரை விசயநகரப்பேரரசன் வசந்தராயன் ஆட்சிக்குக்கீழ் இருந்தது எனக் கொங்குநாட்டுக் கல்வெட்டுக்கள் தெளி வாக்குகின்றன கி. பி. 1509 க்குப் பிறகே இவன் தம்பி கிருட்டிணதேவராயர் ஆட்சிக்கு வருகிறார் வசந்தராயன் காலத்தில் எரமாஞ்சி திம்மைய நாயக்கனும், அவன்மகன் பெரிய திம்மையனும் மகத மண்டலத்தை ஆண்டனர் எனத் தெரிகிறது. 1509 ஆம் ஆண்டு எரமாஞ்சி திம்மைய சிக்கையன் ஆட்சி நிலவியதை ஆறகழூர் கல்வெட்டுகள் தெளிவாக்குகின்றன. கி. பி. 1507 ஆம் ஆண்டு அவன் மகன் ஆட்சி நிலவியதை தம்மம்பட்டிக் கல்வெட்டுகள் வழிஅறியலாம். எனவே மகத நாட்டின் தென்பகுதியை மராடிச் சீர்மை, மண்மலைச் சீர்மைகளைப் பெரிய திம்மய னும், வடபகுதியைஎரமாஞ்சி திம்மையனும் ஆண்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

*கிருட்டிணதேவராயர்:* (கி. பி 1527): கோயில் கருவலறயின் முதன் சுவரில் கிருட்டிணதேவராயன் ஆட்சிக்காலக் கல்வெட்டு சக. 1449. திங்கட்கிழமை (கி. பி. 1527) *மாராடிச் சீர்மையில் உள்ள மங்கை வாரிப்பட்டி* (*மங்கப்பட்டி*) என்ற ஊரும், மன்மலைச் *சீர்மையில் உள்ள செங்கக்கிணறு* (செங்கட்டு) என்ற ஊரும் இரட்டியப்ப நாயக்கன் மூலம்வெங்கப்ப திருமலை நாயக்கன் இக்கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான் எனக் குறிக்கப் பட்டுள்ளது.[8] வெங்கப்ப நாயக்கன் கிருட்டிணதேவராயரின் கீழ் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட ஒரு தலைவன் என கருதுவர். இவன் ஆட்சியின் கீழ் மகத மண்டலமும் உட்பட்டிருத்தல் வேண்டும் என்பது இக் கல்வெட்டால் அறியலாம்.

---

(8) Statistical Appendix 'Salem' P. IXXXVI 1932

**2. கபிலமலை: முருகன்:**

கபிலமலை, நாமக்கல்லுக்கு மேற்கில் ஆறுகல் தொலை வில் உள்ளது. இம்மலை காவிநிறமாதாவின் கபில+மலை கபிலமலை எனப் பெயர் பெற்றது என்றும். சங்கப்புலவர் கபிலர் வாழ்ந்த ஊராதலின் கபிலன்+மலை கபிலமலை யாயிற்று என்றும் கூறுவார்.[9] இம்மலையில் எழுந்தருளி யுள்ள வேலவனைச் சுப்பிரமணியர் என்பர். இக்கோயிலைச் சுற்றிப் பல நாயக்கர் கால மண்டபங்கள் காணப் படுகின் றன. கோயிலுக்குச் செல்லும் வழியில் நடுமலையில் ஒரு கற்குகை உண்டு. இக்கோயிலில் இரண்டு செப்பேடுகள் கிடைத்ததைச்சீவல் குறிக்கிறும். ஒன்று கி. பி. 1574 இவ் இவ்வூர் மக்களால் மண்டபம் கட்டப்பட்டதைப் பற்றியது. மற்றொன்று இக்கோயிலுக்கு மதுரைத் திரு மலை நாயக்கன் கொடுத்த நிலத்தானம் பற்றிக் குறிக் கிறது. இக்கோயில் படிகளில் இருந்து இரண்டு கல் வெட்டுககள் கிடைத்துள்ளன ஒன்று சீரங்க தேவமகா ராயன் (கி. பி, 1854) ஆட்சிக் காலத்தில் சங்கரன் என் பானுல் கோயிலுக்குப் படிகள் கட்டப்பட்ட செயதியைக் கூறுகிறது. மற்றொன்றில், சாதாரணவருடம், செட்டியார் ஒருவர் படியமைத்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் தைமாதத்தில் சிறப்பாக விழா எடுக்கப்படுகிறது. பல ஆயிரக் கணக் கான முருகபக்தர்கள் காவடியெடுத்துக் காணிக்கை செலுத்துகின்றனர். வெளியூரில் இருந்து வருவோர்க்குத் தங்க வசதியாகப் பெரிய மடம் ஒன்று நன்செய் இடை யாற்று வள்ளல் கந்தசாமிக் கண்டரால் கட்டப்பட்டுச் சிறப்பாக இயங்கி வருகிறது.

---

(9) Sewell's Antiquietis Vol I. P. 203.

# இறுவாய்...

ஓரளவு இந்நூல் வழி, சேலம் மாவட்டக் கோயில் களைப் பற்றி தெளிவாக்கினோம். இந்நூல் முழுநிலைப் பெற்ற தொன்றெனக் கூறமுடியாது ஆராய்ச்சியின் வளர்ச்சி பரந்து, விரிந்து, நாளுக்கு நாள் பல புதுக் கண்டுபிடிப்புகள், அகழ்வாய்வில் பல வியக்கத்தக்க முடிவு கள் கிடைத்து வருகின்றன.

இதற்கு சமீபத்தில் இம்மாவட்டத்தில் இருந்து கண்டு பிடிக்கப்பட்ட ஒரு சமணக்குகையை சான்ருகக்காட்டலாம்;

''புகளூருக்கு அக்கரையில் மோகனூருக்கு அருகில் நான்கு கல் தொலைவில் 'செந்நாக்குன்று' என்னும் சிறு குன்று உண்டு. அதில் இயற்கையாக அமைந்த குகைத் தளம் ஒன்று உண்டு. அதில் சமணப் பெரியார்களின் படுக் கைகள் உள்ளன. அவற்றின் ஒன்றில் ஸ்ரீ வத்சலம் என்ற மங்கல உருவம் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன. இது சற்றேறக்குறைய கி. பி. மூன்ரும் நூற்ருண்டைச் சார்ந்த தாகும். கிடைத்தவற்றில் காலத்தால் மிகவும் முற்பட்டது இதுவே எனலாம்.''

*-இரா. நாகசாமி,*
ஆய்வுத்தேன்.

இந்நூலில் மூன்று வட்டங்களில் உள்ள கோயில் களின் வரலாறுகள் மட்டுமே விளக்கப்பட்டுள்ளன. இவ் வாய்வு இத்துடன் நின்று விடக்கூடாது. சேலம் மாவட்டக் கோயில்கள் வரலாற்றை முழு நிலையில் எழுதி வெளியிடப் படவேண்டும். இவ்வாய்வில் பல சிக்கல்கள் உண்டு.

1. அரசாங்கத்தின் ஆதரவின்மை.
2. பல்கலைக் கழகங்களின் ஊக்கமின்மை.
3. கல்வெட்டுக்களை முழு நிலையில் படியெடுத்து மாவட்ட வாரியாக வெளியிடப்படாமை.
4. கோயில் நிர்வாகிகளின் உதாசீனப் போக்கு.

5. கோயில் நிர்வாகக் கெடுபிடிகள்.
6. ஆய்வாளர்களின் தரித்திர நிலை. இவை உடனடியாகத் தீர்க்கப்பட்டால் பல ஆய்வு நூல்கள் தமிழில் தோன்ற வாய்ப்புண்டு.

**இனிச் செய்ய வேண்டியவை :**

தென்னிந்தியாவில் உள்ள கோயிற்கலை வரலாற்று ஆய்வை மேற்கொள்ள ஒரு பொது அமைப்பு மிக அவசியம். கலை, கல்வெட்டு, இலக்கியம், பண்பாடு, மொழியியல்,முதலியவற்றேடு மிக நெருங்கியத் தொடர்பு கொண்டு விளங்கும் தமிழ்த்துறைகளை இதற்குரிய மேடையாக்கிக் கொள்ளலாம்.

தமிழகப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைகள் 'கோயில் வரலாற்று ஆய்வுக் கழகங்கள்' நிறுவி அரசு உதவியோடு தங்கள் பணிகளை விரைவாக மேற்கொள்ள வேண்டும்.

1. தனிக் கோயில் வரலாறு.
2. மாவட்டக் கோயில் வரலாறு.
3. கோயில் சிற்பக் கலை வரலாறு.
4. கல்வெட்டாய்வு; கல்வெட்டு மொழியாய்வு

எனப் பகுத்துக்கொண்டு இத்துறையில் டாக்டர் பட்டம் போன்ற வற்றிற்கு மேற்கொள்ளுமாறு மாணவர்களை ஆர்வமூட்டலாம். தமிழ்ப் படிப்போரிலேயே இதைப் பிரபலபடுத்திஞல் தமிழக வரலாற்றில் தெளிவும், மக்களிடையே பரவியுள்ள புராணக் கருத்துக்களையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடிப் பழக்கம் மண்மூடிப் போகும். ஆய்வு வளம்பெறும், ஆய்வாளர்களும் வளம் பெறுவர். வட இந்திய பல்கலைக் கழகங்கள், மேலை நாட்டுப் பல்கலைக் கழகங்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டு டாக்டர் பட்டங்களுக்கு மாணவர்களை இதில் ஈடுபடுத்துவது பாராட்டத் தக்க முயற்சியாகும்.

சில சேலம் மாவட்டக் கோயில்கள்.. பின்னிணைப்பு

| எண். | ஊர் | இறைவன் பெயர் | பிற செய்திகள் |
|---|---|---|---|
| 1. | அவணிப் பேரூர் | பசுபதி | சிவன் கோயில் |
| 2. | அமரம் (ஓமலூர்) | காசிலிங்கம் | சனவரி தைபூச விழா |
| 3. | அயோத்தியாபட்டணம் | ஸ்ரீ கோதண்டராமன் | ஏப்ரல் மாத திருவிழா |
| 4. | அழகாபுரம் | மாரியம்மன் | பிப்ரவரி 7-ம் நாள் |
| 5. | அரியாக்கவுண்டன்பட்டி | ,, | சனவரி 3 ,, |
| 6. | அத்தனூர் (இராசீபுரம்) | அத்தனூர் அம்மன் | ஏப்ரல் விழா |
| 7. | அரங்கனூர் | மாரியம்மன் | மார்ச் விழா |
| 8. | ஆத்தூர் | திரௌபதியம்மன் | அம்மன் கோயில் |
| | | கோட்டைப் பெருமாள் | விட்ணு கோயில் |
| | | காய நிர்மலேசுவரன் | சிவன் |
| 9. | ஆறகலூர் | காமநாதர் | சிவன் கோவில் |
| 10. | ஆச்சன் குட்டப்பட்டி | சிவன் | *சிறுதொண்டன் திருவிழா ஏப்ரல்* |
| 11. | ஆண்டிப்பட்டி (சேலம்) | மாரியம்மன் | சனவரி திருவிழா |
| 12. | ஆனையாம்பட்டி | ஏகாம்பரர் | சிவன் மார்ச் விழா |
| 13. | இராசீபுரம் | ஏகாம்பர நாதர் | மேற்கு பக்க சன்னிதி |
| 14. | உஞ்சானை | காளியம்மன் | அம்மன் |
| 15. | உத்தமசோழபுரம் | கரபுர நாதர் | சிவன். கற்பூரநாதர் |
| 16. | எடப்பாடி | நஞ்சுண்டான் | சிவன் |

| | | | |
|---|---|---|---|
| 17. | எரியமங்கலம் | இளையபெருமாள் | ஏப்ரல் திருவிழா |
| 18. | ஏத்தாப்பூர் | சாம்பமூர்த்தி | சனவரி 7 நாள் விழா |
| 19. | ஏற்காடு | வண்டிராமன் | ஏப்ரல் திருவிழா |
| 20. | ஜயம்பெருமாள்பட்டி | திரௌபதியம்மன் | மே 3 நாள் விழா |
| 21. | ஓமலூர் | வசந்தீச்வரர் | சிவன் |
| 22. | ஓமலூர் (காவிரிபுரம்) | சலகண்டேச்வரர் | |
| 23 | ஓமலூர் | வெங்கட்ராமன் | விட்ணு |
| 24. | ,, | மாரியம்மன் | மார்ச் 2 நாள் விழா |
| 25. | கச்சுப்பட்டி | ஏகாம்பரர் | சிவன் |
| 26. | கபிலமலை | முருகன் | தை மாத விழா |
| 27. | கம்மாலபுரம் (ஓமலூர்) | மாரியம்மன் | ஏப்ரல் 3 நாள் விழா |
| 28. | களத்தூர் (மேட்டூர்) | மாரியம்மன் | மார்ச் 3 நாள் விழா |
| 29. | கல்லாங்குளம் | மாரியம்மன் | அக்டோடர் 30 நாள் விழா |
| 20. | கருப்பூர் | கைலாசநாதர் | சிவன் |
| 31. | கஞ்சமலை | சித்தேச்வரர் | ,, |
| 32. | காட்டுக்கோட்டை (ஆத்தூர்) | முருகன் | மார்ச் 3 நாள் விழா |
| 33. | காளிப்பட்டி | முருகன் | சூன் 5 நாள் விழா |
| 34. | காவேரிபுரம் | மாரியம்மன் | ஆகஸ்டு 3 நாள் விழா |
| 35. | காளிப்பட்டி (ஓமலூர் | மாரியம்மன் | 15 நாள் விழா |
| 36. | காடையாம்பட்டி ,, | ,, | ,, ,, |

| | | | |
|---|---|---|---|
| 37. | காவிரிபுரம் | சலகண்டேச்வரர் | சிவன் |
| 38. | காவிரிப்பட்டி | காவிரிநாதர் | ,, |
| 39. | காவேரிப்பட்டி | அனந்தேச்வரர் | ,, |
| 40. | கெங்கவல்லி | கைலாதநாதர் | ,, |
| 41. | கோட்டை (சேலம்) | அழகிரிநாதர் | விட்ணு |
| 42. | ,, ,, | ஏகாம்பரேசுவரர் | சிவன் |
| 43 | கொல்லிமலே | அறப்பள்ளி உடையார் | ,, |
| 44. | கொத்தாம்பூண்டி | நல்லகுமாரசாமி | பிப்ரவரி 7 நாள் விழா |
| 45. | குமாரபாளேயம் (திருச்செங்கோடு) | காளி | பிப்ரவரி 7 நாள் விழா |
| 46. | கூடலூர் | சீயாளநாதசாமி | சிவன் |
| 47. | சங்ககிரி | சோமேச்வரர் | ,, |
| 48. | சாத்தப்பாடி | சிதம்பரேச்வரர் | ,, |
| 49. | செட்டி மான்குறிச்சி | உலகேச்வரர் | ,, |
| 50. | சேமந்தப்பட்டி | ஏகாம்பரர் | ,, |
| 51. | சேர்வராயன் மலே | அம்மன் கோயில் | |
| 52. | சேலம் | சுகனேச்வரன் | சிவன் |
| 53. | சிங்கபுரம் | பட்டீச்வரர் | ,, |
| 54. | சின்னக்கடைவீதி (சேலம்) | மாதேச்வரர் | ,, |
| 55. | சின்னமுத்து தெரு | ராமலிங்கசோலிச்வரர் | ,, |
| 56. | தசவிளக்கு | உலகீச்வரர் | ,, |

| | | | |
|---|---|---|---|
| 57. | தலைவாசல் | கைலாயநாதர் | சிவன் |
| 58. | தம்மம்பட்டி | நரசிம்மப் பெருமாள் | விட்ணு |
| 59. | தாரமங்கலம் | ஈச்வரன் | சிவன் |
| 60. | தாதனூர் | மாரியம்மன் | மார்ச் 3 நாள் விழா |
| 61. | தாராபுரம் | சோமேச்வரர் | சிவன் |
| 62. | தீண்டாமங்கலம் | மல்லிகார்சுனன் | |
| 63. | தெடாவூர் | ஏகாம்பரநாதர் | சிவன் |
| 64. | தின்னப்பட்டி | மாரியம்மன் | மார்ச் விழா |
| 65. | திருச்செங்கோடு | அர்த்தநாரீசன் | சிவன் |
| 66. | தீர்த்தகிரிப்பட்டி (மேச்சேரி) | மாரியம்மன் | மார்ச் விழா |
| 67. | தீவட்டிப்பட்டி | மாரியம்மன் | மார்ச் 15 நாள் விழா |
| 68. | தொளசம்பட்டி | நாகர் | ஏப்ரல் 3 நாள் விழா |
| 69. | நத்தமேடு (சேலம்) | சிதம்பரேச்வரர் | சிவன் |
| 70. | நடுவலூர் | கைலாயநாதர் | ,, |
| 71. | நாமக்கல் | நரசிம்மர் | விட்ணு |
| 72. | நைனாமலை | வரதராசப்பெருமாள் | ,, |
| 73. | நள்ளூர் | மாரியம்மன் | ஏப்ரல் விழா |
| 74. | பனைமடல் | கூத்தாண்டார் | அரவன் |
| 75. | பள்ளிப்பட்டி (மேச்சேரி) | மாரியம்மன் | சனவரி விழா |
| 76. | பழமலை | சித்தேச்வரர் | சிவன் |

| | | | |
|---|---|---|---|
| 77. | பால்பாக்கி | காளியம்மன் | சனவரி 2 நாள் விழா |
| 78. | பெத்தநாயக்கன்பாளையம் | ஆட்கொண்டீச்வரர் | சிவன் |
| 79. | பெரியேரி | தான்தோன்றீச்வரர் | ,, |
| 80 | புனவாசல் | ,, ,, | ,, |
| 81. | பூலாம்பாடி | கைலாயநாதர் | ,, |
| 82. | பேளூர் | தான்தோன்றீச்வரர் | பிப்ரவரி விழா |
| 83. | மல்லூர் | திரௌபதியம்மன் | மே மாத விழா |
| 84. | மல்லிகுண்டம் | ஏகாம்பரேச்வரர் | சிவன் |
| 85. | மல்லசமுத்திரம் | மாரியம்மன் | மார்ச் விழா |
| 86. | மாமாங்கத்துப்பட்டி | சோழீச்வரன் | சிவன் |
| 87. | மாவிரெட்டிப்பட்டி | மாரியம்மன் | சனவரி விழா |
| 88. | மேச்சேரி | சுப்பிரமணியர் | சனவரி விழா |
| | ,, | பத்ரகாளி | பிப்ரவரி 7 நாள் விழா |
| 89. | மேட்டூர் | பசுபதீச்வரர் | சிவன் |
| | ,, | மாரியம்மன் | மார்ச் 3 நாள் விழா |
| 90. | முத்துநாயக்கன்பட்டி | சொக்கநாதர் | சிவன் |
| 91. | ரெட்டிப்பட்டி | மாரியம்மன் | மார்ச் மாதம் ,, |
| 92. | ராமிரெட்டிப்பட்டி | திரௌபதியம்மன் | சூன் மாதம் ,, |
| 93. | லத்திவாடி | மாரியம்மன் | மார்ச் விழா |
| 94 | வனவாசி | தியாகராசர் | சிவன் |
| 95. | வாழப்பாடி | உக்கிரநரசிம்மன் | மார்ச் விழா |

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 16 | இருந்தால் | இருந்தாள் |
| 4 | 7 | முக்கிய பங்கு | முக்கியப் பங்கு |
| 6 | 1 | படிெ ெக்கப்பெற்ற | படியெடுக்கப் பெற்ற |
| 10 | 14 | மனித உருவப் படைப்பு | மனித விலங்குருப் படைப்பு |
| 18 | 4 | விரனே | வீரனே |
| 22 | 20 | பெணடிற்க்காக | பெண்டிர்க்காக |
| 33 | 2 | மாற்ருக சில | மாற்ருகச் சில |
| 37 | 13 | சரான்ருக | சான்ருக |
| 40 | 10 | நிகண் டில் | நிகண்டின் |
| 49 | 6 | உத்தமச்சோழன் | உத்தமசோழன் |
| 55 | 10 | என்றுப் பெயர் | என்று பெயர் |
| 63 | 13 | தொகையில் | தொகையுள் |
| ,, | 22 | கட்டனர் | கட்டினர் |
| 72 | 21 | பகண்டியர் | பாண்டியர் |
| 76 | 25 | இத்தவம் | இத்தலம் |
| 92 | 26 | குலொத்துங்கன் | குலோத்துங்கன் |
| 95 | 3 | கல்வெட்டுக் களுக்கும் | கல் வெட்டுக்களும் |
| 106 | 18 | துண் மண்ட பங்கள் | தூண் மண்டபங்கள் |
| 107 | 17 | ஆகியன | ஆகியன பற்றி |
| 112 | 12 | 1574-இவ் | 1574-இல் |



தாரமங்கலம் : இரதி சிற்பம்



தெடாவூர் : திருமகளின் சிலை பக்கம் : 103



ஆத்தூர் கோட்டை இராணியின் நீச்சல் குளம்
பக்கம் : 80



செந்தாரப்பட்டி நடுகற்கள்... பக்கம் : 20



ஆத்தூர் : காயநிர்மலேச்வரன் கோயில்
பக்கம் : 80



ஆரகமூர் - புத்தர் சிலை



தெடாவூர்: ஏகாம்பரநாதர் கோயில்...
பக்கம் : 100



ஆறகழூர்:
காமநாதர்
கோயில்...

பக்கம்: 90



ஆத்தூர் :
கோட்டை

பக்கம்: 78



சேலம் - சுகவனேஸ்வரன் கோயிலின்
பின்புற வாயில்...

# Select Bibliography

INSCRIPTIONS:

★Annual Report of Epigraphy (From 1887), Madras.

★Epigraphica Indica and Records of the Archaeo logical Survey of India (1892-1929), calcutta.

★Inscriptions of the Madras Presidency 3 Vols. (collected till 1915). (IMP) by V Rangachari, Madras, 1919.

★List of the Antiquarian remains in the Presidency of Madras, 2 Vols collected by Robert Sewell, Madras, (1882-1884).

★SOUTH INDIAN INSCRIPTIONS (from. 1890), edited by Hutzsch, Venkayya, and Krishna Sastri, Srinivasa Rao, Sircar. XIX Volumes. Madras.

★Foot's Indian Pre-historic and Proto-historic Antiquities.

★Indian Epigraphy and South Indian Scripts. by C.Sivaramamurthi, M.A Vol. III No. 4,1966.

TRADITION, MANUAL AND GAZETTEERS:

★A Catalague of oriental Historical Mss 3 Vols. by the Rev. W. Taylor, Madras. 1857, 1860, 1862.

*Oriental Historical Mss. 2 Vols, by the same author. 1835.

*Gazetteer of Trichinopoly Dist. Heming way, F. R , 1907.

*'Manual of the Salem Dist. Lefanu, H; 1883.

*Gazetteer of the Salem Dist; Richards, F. J., 2 Vols; 1918.

*Statisical Appendix(SalemDistrict)2 vols.1932.

*Annual Progress reports of the Archaeological Survey of Madras and coorg.

*Geology of the neigh bourhood of Salem with special reference to Leschenautt. de-la Tour's observations. by T. H. Holland. Vol XXX

*"Thirty Pallava copper plates"-History Academy, Madras. 1966.

-Press List of Ancient Records in the Salem District, 1906.

*Records of the Geological Survey of India Vol. XXIV.

*Census of India Vol. IX Part XI-D,
Temples of Madras state, (Coimbatore, Salem) 1969.

*Mysore Gazetteer Vol. II. *Rao. C. Hayavadana's.*

*Silparathnam;Sarasvati Mahal. Tanjavur.1961

*Sakaladhikara- „ 1961.

*Kasvapa Silpa Sastram 2 Volms. ,,

*Sollan Purva Pattayam - Madras Government oriental Mss. Series No. 5 , 1950.

*Kongu Dasa Rajakkal No. 6 : 1950

DICTIONARY :

*கலைக்களஞ்சியம்: (1 to 10 volms) தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை.

*'அபிதான சிந்தாமணி' சிவப்பிரகாச முதலியார், குமாரசாமி நாயுடு சன்ஸ். 1984.

*Index to Pre-Pallavan Tamil and Sangam Literatures.

*'Encyclopaedia Britannica' Vol I, II, IV, William Berton Publisher London.

*'Index dos mots de la Litterature tamoule ancienne' - Vol. I and II francais Institut. Pondichary 1967.

*'தற்கால தமிழ்ச் சொல்லகராதி' பவானந்தம் பிள்ளை-மாக்மில்லன் கம்பெனி, மதருஸ்-1952.

LITERATURE :

*பத்துப்பாட்டு, கழகப் பதிப்புகள்.

*எட்டுத் தொகை ,,

*தொல்காப்பியம் ,,

*பதினெண்கீழ் கணக்கு ,,

*சிலப்பதிகாரம் — உ. வே. சா. பதிப்பு.

*மணிமேகலை — ,,

★தேவாரம் — திருப்பனந்தாள் மடப்பதிப்பு.

★பெரியபுராணம் — காசிமடம். 1964.

★திருவெள்ளூர் புராணம் - S M. நாராயணசாமிப் பிள்ளை. பதிப்பு. 1927

★தனிப்பாடல் திரட்டு 2 Vols கா. சு. பிள்ளை. பதிப்பு: 1939.

★கலிங்கத்துப் பரணி: முத்துசிவன் வெளியீடு 1958.

★ஆறகளூர் காமநாதர்கோவை - அடிகளாசிரியன். பதிப்பு. 1947.

★புறப்பொருள்வெண்பாமாலை - தியாகராசர் வெளியீடு 1963.

★கொங்குமண்டலச் சதகம் –கார்மேகக் கவிஞர்.

★கொங்குமண்டலச் சதகம் - முத்துசாமிக் கோனார். பதிப்பு 1923.

★திருச்செங்கோட்டுக் கலம்பகம்-பரமசிவக் கவுண்டர். பதிப்பு. திருச்செங்கோடு, 1896

★மகாசிவபுராணம். நன்றி: சேலம் சுகவனேசுவரன் கோயில் தேவஸ்தானம்.

★சேலம் தலபுராணம் ,,

ENGLISH BOOKS:

1 *Arokiya Samy,* 'Kongu country'. Madras University.

2 *Blacker, J. F.* 'The ABC of indian Art. w.c. 2. London. 1922.

3 *Dykes,* 'Salem and Indian collectrare' 1883.

4 Gonda 'Notes on Names and the name of God in ancient India' London. 1970.

5 Hockett, The critical Method in Historical Research and writing. Newyork. The macmillan co.

6 Holland, 'Iron ore and Iron Industries of the Salem District Imperial Hand Book No. 8.

7 Jean Johonson & Donald, 'Go and Gods in Hinduisum, Arnold Heinemann India. New Delhi.

8 Krishnaswami, V. D, Pre-historic Man around Madras. Indian Academy Scrence. 1938.

9 Kanakasabhai. 'The Tamils Eighteen Hundred years ago. Kazagam. 1956.

10 Lal. B. B., 'Indian Archaeology Since Independence. Motilal Bararsidass. 1964.

11 Mahalingam, T.V. 'Administration and Social Life under Vijayanagar'.

12 Minakshi, 'Administration and Social life under Pallavas'. Madras University. 1938.

13 Nilakanta Sastri, 'The colas' Madras University Vol. I and II 1935, 37.

14 ——— The Pandyan Kindom. 1929, London.

15 Nestyuk, 'Origin of man' foreign Langugess Pub Moscow.

16 Paul. J. Sachs, 'Great Drawings' washington Press. 1961.

17 Pope. Arthus, 'The Language of Drawing and Painting - Harward University Press. 1949.

18 Ramachandran, 'A Bibliography of Indian megaliths ' The State Department of Archaeslosy. 1971.

19 Sewell, Robert, 'A forgotten Empire' London, 1924

20 Shortt, Dr., 'Hill Range of India ' 1870

21 Sankalia. H. D. 'Stone age tools' Decean College, Poona. 1964

22 Sundera nath Dasgupta, 'Fundamental of Indian Art, Bhavan's Book University. Bombay. 1954.

23 Sathianatha Iyar, 'History of the nayaks of Madura.

24 Thurston. Dr. 'Castes and tribes of South India' (7 Vols )Madras. 1909.

25 Vidya Dehejia, 'The Namakkal caves' The State Department oJ Archaeology Madras. 1969.

26 Venkata Ramanayya, 'An eessay of the origin of the South Indian Temple. Madras University. 1939.

27 Windels, fernand., 'The Lascaux Cave Paintings' Viking Press. 1961.

# Tamil


1 இராகவையங்கார். மு., 'சாசனத் தமிழ்க் கவி சரிதம். நாராயணையங்கார் பதிப்பு 1961

2 ——— ஆராய்ச்சித் தொகுதி. பாரி நிலையம்.

3 இராசமாணிக்கனர், 'பல்லவர் வரலாறு' கழக வெளியீடு.

4 இராமகிருட்டினன், எஸ்., 'இந்திய பண்பாடும் தமிழரும்' மீனாட்சி புத்தக நிலையம்.

5 இராமச்சந்திரஞ் செட்டியார், 'கொங்கு நாட்டு வரலாறு' (2Volms) 2nd.Ed, சாந்தலிங்க அடிகளார். தமிழ்க் கல்லூரி. பேரூர். 1972.

6 புலவர் குழந்தை, 'கொங்கு நாடு' வேலா பதிப்பகம்.

7 கந்தையா பிள்ளை, ந. சி, 'வரலாற்றுக்கு முற்பட்ட தமிழர்' புரொகிரசிவ அச்சகம். 1957.

8 சேதுப்பிள்ளை. ரா பி., 'தமிழகம்,' ஊரும் பேரும். 2-ஆம் பதிப்பு 1950.

9 சுப்பையா, 'கொங்குநாட்டுக் கோயில்கள்' தமிழ் புத்தக வெளியீட்டுச் சங்கம்.

10 சீனிவாசன் P.R. "கோயில் கலையும் சிற்பமும்" கலைஞன் பதிப்பகம். 1965.

11 ——— 'நாம் வணங்கும் தெய்வங்கள்' இளங்கோ பதிப்பகம், சென்னை 1959.

12 சோமலே, 'சேலம் மாவட்டம்'பாரி நிலையம், 1961.

13 சதாசிவ பண்டாரத்தார். 'பிற்காலச் சோழர் சரித்திரம்' 3 Vols. அண்ணாமலைப் பல்கலைக் கழக பதிப்பு.

14 ——— 'பாண்டியர் வரலாறு' கழக வெளியீடு.

15 நாகசாமி. R. 'கலைச் செல்வங்கள்' தமிழக அரசு வெளியீடு.

16 பாலசுப்ரமணியம், S. R. "சோழர் கலைப்பாணி" பாரி நிலையம், சென்னை. 1966.

17 ——— 'முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்' தமிழ் வெளியீட்டுக் கழகம். 1966

18 பரந்தாமன், அ.கி., 'மதுரை நாயக்கர் வரலாறு' பாரி நிலையம். 1960.

19 பாசுக்கரத் தொண்டைமான், 'வேங்கடம் முதல் குமரிவரை' காவிரிக் கரையினிலே' சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு. திருநெல்வேலி. 1961.

20 முருகவேள், 'கொங்கு நாட்டுத் தலங்கள்' சமயப் பிரச்சார நிலையம், சென்னை.

21 சீனி. வேங்கடசாமி. மயிலை, 'சாசனச் செய்யுள் மஞ்சரி' சாகித்ய அக்கடமி 1959.

22 ——— 'பௌத்தமும் தமிழும்' கழக வெளியீடு. 1958.

## *Journals and Periodicals :*

★Indian Antiquary.

★Journal of orintal Research.

★Journal of the Royal Asiatic Society, Bombay Branch.

★Quarterly Journal of the mythic Society.

# அருஞ்சொல் அகராதி

[எண்: பக்க எண்.]

## SALEM DISTRICT
### TEMPLES.

Kilometres 5 0 5 10 15

ANDHRA PRADESH

MYSORE

NORTH ARCOT

SOUTH ARCOT

COIMBATORE

TIRUCHIRAPALLI

KRISHNAGIRI

DHARMAPURI

HARUR

HOSUR

OMALUR

YERCAUD

SALEM

SANKARI

RASIPURAM

ATTUR

TIRUCHENGODE

NAMAKKAL

SIVA TEMPLE ..

VISHNU .....


பிரிக்கப்படாத சேலம் மாவட்ட வரைபடம்.